*Kumaraṉ*

*Āram 16, muttu 34*

*April 06, 1939*

Record no. 313

REG NO M. 1823. KUMARAN WEEKLY. TELEPHONE டெலிபோன் 40

சந்தா விவரம்

உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 5-0-0
ஆறு மாதம் 3-0-0
சிலோன் ரூ. 6-0-0
பர்மா, மலாய் முதலிய வெளிநாடு ஒரு 1-க்கு ரூ. 7-0-0

# குமரன்

விளம்பரம்.

நோட்டீஸ், கோர்ட் விளம்பரம் முதலியவைகளுக்கு இஞ்சு ஒன்றுக்கு ரூ. 2-0-0
வியாபார சம்பந்தமானது ரூ. 0-12-0
ஒப்பந்த விளம்பரத்துக்கு மானேஜருக்கெழுதவும்.

வியாழன்தோறும் வெளிவரும் மாதப் பதிப்பும் சேர்ந்தது. PUBLISHED EVERY THURSDAY.

ஆரம் 16. காரைக்குடி, வெகுதானிய-ஹூ பங்குனி-மீ 24-உ (6—4—39) முத்து 34.

## கவிச் சக்ரவர்த்தி கம்பர் மாண்பு

### செல்வத்திற் செல்வம் கவிச் செல்வம்

**நாரைக்குடி கம்பர் விழாவில்**
**திரு. டி. கே. சிதம்பரநாத முதலியார் பிரசங்கம்**

காரைக்குடியில் பங்குனி 20, 21-உகளில் நடைபெற்ற கம்பர் விழாவில் தலைமைவகித்த திருவாளர் டி. கே. சிதம்பரநாத முதலியாரவர்கள் செய்த முகவுரை, பிரசங்கிகள் பேசி முடிந்ததும் தலைவரின் கருத்துரை, முடிவுரை ஆகியவைகள் கீழே தரப்படுகின்றன:

**உலகிலேயே உயர்ந்தவன் கம்பன்**

தமிழுலகத்தில் சந்தேகத்திற் கிடமின்றி—ஏன்? உலகத்திலுள்ள மற்ற கவிகளுடன் ஒப்பிட்டுப்பார்த்தாலும், கம்பன் பெரிய கவி. இது உபசார வார்த்தை யல்ல. உண்மையிலேயே உலகிற் சிறந்த கவி இது நான் மட்டும் சொல்லவில்லை. மேனாட்டு பாஷைகள் அனைத்தும் அறிந்த ஸ்ரீமான் வ. வெ. சு. அய்யர் சொன்னார். "நான் பல பாஷைகளிலும் உள்ள கவிகளைப் படித்தேன். கம்பன் கவி எல்லா வற்றிலும் சிறந்தது". வ. வெ. சு. அய்யர் இவ்வளவு தைரியமாகச் சொன்னாரே அதை நாம் அனைவரும் பாராட்ட வேண்டும். ஹைகோர்ட்டு ஜட்ஜாக இருந்த சேஷகிரி அய்யர், கம்பனுக்கு சமானமாகக் கதைப் பாங்கு, நாடகப் பாங்கு, பாத்திரங்களை அமைக்கும் பாங்கு வெறொருவராலும் செய்ய முடியாது என்று சொன்னார்.

**ஆயிரம் ஆண்டுக் கொருமுறை**

பத்தாண்டுகட்கு முன்னர் சென்னை சர்வகலாசாலை சம்பந்தப்பட்ட 'யூனிவர்சிட்டி அகாடமி'யில் கம்பனைப் பற்றிப் பேசினேன். அப்பொழுது தலைமைவகித்த மாஜி ஹைகோர்ட்டு ஜட்ஜ் திரு. V. V. சீனிவாசய்யங்கார் "வடமொழியிலுள்ள வால்மீகி ராமாயணத்தை முதலிலிருந்து கடைசி வரையில் வாசித்திருக்கிறேன். கம்பராமாயணத்தை பால சரஸ்வதி கிருஷ்ணமாச்சாரியார் என்ற புலவர் வாயால் கேட்டேன். சுமார் மூன்று வருட காலம் என்னுடனே இருந்தார். அப்படிக் கேட்டதின் பயனாக கம்பனின் அற்புதமான தத்துவம் உலகிலேயே இல்லை. இது மிகப் பெரிது என்று சொல்கிறேன்" என்றார். மேல் நாட்டார் ஆயிரம் வருடத்திற் கொருமுறை கவி பிறக்கிறான் என்று சொல்கிறார்கள். எவ்வளவு உண்மை! கவியின் மாண்பு எவ்வளவு உயர்ந்தது என்பதை அறிந்து கொள்ளுங்கள்.

**பாடலும் செய்யுளும்**

மாணவர்கள் கவி இயற்றலாம். அது யாப்பிலக் கணத்திற்கு முரண்பாடாக இல்லாமலு மிருக்கலாம். இது செய்யுள். இன்னும் பாடலாம். இசையும் பொருந்தியிருக்கும், படிக்கவும் ரசிக்கும், இதைப் பாடல் என்று தான் சொல்ல வேண்டும். நாம் எல்லோருமே முயன்றால் பாடல் பாடலாம். செய்யுள் இயற்றலாம். ஆனால் கவி நம்மால் எழுதமுடியாது.

**கவி என்றால் என்ன?**

ஆன்மாவுக்குள் ஒரு தத்துவம் இருக்கிறது. அது உணர்ச்சியாக வெளிவரும் பொழுது கவியாகிறது. இது தான் கவி. கவி விஷயமாக மேல் நாட்டாருக்குத் தெளிவான அபிப்பிராயமில்லை. வசனத்தில் கவி இருப்பதாகச் சொல்கிறார்கள். அது இல்லை. கவிக்குத் தனி உருவம் இருக்கிறது. அது அனுநியாக ஏற்பட்டது. ஒரு கவி பத்துலக்ஷம் வருடகாலம் பண்பட்டு வெளிவருகிற தென்று சொன்னால் அது தவறல்ல.

**சீரும் அசையும்**

வெண்பா, விருத்தம் ஆகியவை இவற்றிற்குரியசீர், அசைகளை வைத்து இயற்றுபவரின் கெட்டிக்காரத்தனத்தைக் காட்டுகிறது. இதைத் தான் கவி தாகூர் சொன்னார் மிக அழகாக. கவி ஜனங்களுக்கு வியப்பை உண்டாக்குவதற்காக ஏற்பட்டதல்ல. இப்படிச் செய்ய நினைப்பது முட்டாள் தனம் என்று கவி தாகூர் சொல்கிறார்:

(கவி தாகூர் சொன்னது ஆங்கிலத்தில் தரப்படுகின்றது.)

There are foolish persons who think metre is a species of verbal gymnastics or legerdemain of which the object is to win the admiration of the crowd. That is not so. Metre is born as all beauty is born the universe through. The current set up within well-defined bounds gives metrical verse power to move the minds of men.

(Glimpses of Bengal—P. 116)

கவியிலிருக்கிற இசைப் பண்புகள் அனுநியானவை. தமிழில் ஒரு கவி வந்ததென்று சொன்னால் அது தமிழ் பாஷை தோன்றிய முதலேயாகும். தத்துவம் நிரம்பியது ஒரு கவி.

**தன் பிள்ளையே தாய்க்கு ராஜா**

தன்னுடைய கவியை ரசிப்பவனே உலகில் சிறந்தவன் என்று கவியை இயற்றுபவன் எண்ணுகிறான். அளவிறந்த மகிழ்ச்சியை அடைகிறான். தான் பெற்றெடுத்த குழந்தையைப்பற்றித் தாயார் என்னென்ன கனவுகள் காண்கிறாள்? அவன் எவ்வளவு உயர்ந்தவனாக வரவேண்டுமென்று எண்ணுகின்றாள்? கவிகளும் தாய்மார்களைப் போன்றுதான். பிள்ளையும் தாயும் எப்படி தேகத்தோடு ஒட்டியவர்களோ, அப்படி கவி தேகத்தோடு ஒட்டியது. தன் பிள்ளையைத் தாயார் "ராஜா" என்று அழைக்கிறாள் அன்போடு. இது உண்மை; அரசனது ஆணையைக் கூட மீற எண்ணுவாள்; ஆனால் தன் மைந்தனை ராஜனின் ஆணையைத் தட்ட மாட்டாள்.

**கவியால் புகழப்படும் ரசிகன்**

வாணன் என்ற வள்ளல் கம்பனின் கவியில் ஈடுபட்டான். வாணன் தன் கவியை அனுபவிக்கிறான் என்பதற்காகக் கம்பன் அவன் மீது கொண்டிருந்த பிரியம் அளவிட முடியாதது.

வாணன் புகழுரையா வாயுண்டோ
பைந்தமிழ்தேர்
வாணன் பெயரெழுதா மார்புண்டோ'—
கோடிதாங்கி நில்லாத [வாணன்
கோம்புண்டோ உண்டோ
அடி தாங்கிநில்லா அரசு.

இந்தப் பாட்டில் பாவம் நன்றாக வெளிப்பட்டுத் தெரிகிறது. வாணனுடைய புகழைச்சொல்லாத வாயுண்டா? எல்லாருடைய வாயும் வாணனுடைய புகழைப்பற்றி உரைத்துக்கொண்டிருக்கின்றது. பைந் தமிழ் தேர் வாணன்—அழகிய செழுமையான தமிழை

(3-ம் பக்கம் பார்க்க)

# சென்னை ரேடியோ

(ஏப்ரல் 6உ முதல் 13உ வரை)

[மீடியம் வேவ்லெங்த் 211 மீட்டர்கள்
* இக் குறியிட்டவை 60.98 மீட்டர்கள்]

## 6உ வியாழன்

மாலை
5-00 ஸ்ரீ என். ராமமூர்த்தி வாய்ப்பாட்டு
5-30 புதுக்கோட்டை ஸ்ரீ சுப்பிரமணிய அய்யர் புல்லாங்குழல்
6-00 ஸ்ரீ என். ராமமூர்த்தி வாய்ப்பாட்டு
*6-00 பஜனை— அ. இ. ரே. கோஷ்டி
*6-05 நடப்பு விலைவாசிகள்
*6-10 சுகாதார விதிப்படி வீடு அமைத்தல்— தமிழ்ப் பேச்சு
6-15 அ. இ. ரே. வாத்தியக் கோஷ்டி
*6-20 ஸ்ரீமதி ஜானகியும் ஸ்ரீ வெங்கடேசனும் இசைப் பாட்டு
6-30 விபீஷண சரணாகதி—தமிழ் நாடகம்
6-45 வக்கெய்யகார ரத்ன ஹரிகேசநல்லூர் பூஷண சாஸ்திரி பிடில்
7-30 ஷை
8-30 ஸ்ரீமதி எ சுந்தரம் வாய்ப்பாட்டு
9-20 விமர்சனக்காரர்கள்—ஸ்ரீ எஸ். கே. யக்ஞ நாராயண அய்யர் பேச்சு.
9-35 ஐரோப்பிய சங்கீதம்.
* 9-35 ஸ்ரீமதி சுந்தரம் வாய்ப்பாட்டு

★

## 7உ வெள்ளி

மாலை
5-00 ஸ்ரீ ஜி. ஹரிஹரன்—வாய்ப்பாட்டு
5-55 அ. இ ரே. வாத்தியக் கோஷ்டி மாளவி
6 00 ஸ்ரீ எம். எஸ். நாராயண ஸ்வாமி அய்யர்—வாய்ப்பாட்டு
6-45 ஸ்ரீ எ. பார்த்தசாரதி—நாகஸ்வரம்
7.15 பணத்தை எங்கே, எப்படி போட்டு வைப்பது?...ஸ்ரீ என். எஸ். கோவிந்தராஜன் தமிழ்ப் பேச்சு.
7-30 ஸ்ரீ எ. பார்த்தசாரதி—நாகஸ்வரம்
8-30 குமாரி ராஜலக்ஷ்மியும் குமாரி லலிதா ராகவனும் வாய்ப்பாட்டு
9-20 மன்னன்—ஜே ப்ராங்கோ ஆங்கிலப் பேச்சு
9-35 குமாரி ராஜலக்ஷ்மியும் குமாரி லலிதா ராகவனும் வாய்ப்பாட்டு
10.00 அ. இ. ரே. வீணை

★

## 8உ சனி

மாலை
5-00 மேச்செவல்பட்டி ஸ்ரீ வெங்கடரமண ராவ் ஜலதரங்கம்
5-30 ஸ்ரீ எஸ். சோமசுந்தரம்—வாய்ப்பாட்டு
6-00 ரஹிம் அலி —வாய்ப்பாட்டு
6-05 நடப்பு விலைவாசிகள்
6-10 கில அடமான பாங்குகள். ஸ்ரீ பத்மநாப முதலியார் தமிழ் பேச்சு
6-20 கம்பராமாயணம்
6-30 விறகு வெட்டியின் பாட்டு—மலையாள நாடகம்
6-45 ஸ்ரீ சோமசுந்தரம் வாய்ப்பாட்டு
7-00 ஸ்ரீ ஆர். கே. வெங்கட்ராம சாஸ்திரி பிடில்
7-30 ஸ்ரீமதி தர்மாம்பாள் வாய்ப்பாட்டு
8-30 சேர்மா தேவி எல் சுப்ரமண்ய சாஸ்திரி வீணை
9-20 சிப்பாயின் துயரம்—இங்கிலீஷ் நாடகம்
9-35 ஐரோப்பிய சங்கீதம்
*9-50 சேர்மாதேவி ஸ்ரீ எல். சுப்ரமண்ய சாஸ்திரி வீணை

★

## 9உ ஞாயிறு

மாலை
5-00 ஸ்ரீ கே. என். ராமமூர்த்தி ஐயர் வாய்ப்பாட்டு
5-30 ஸ்ரீ எஸ். எ. குப்புசாமி வாய்ப்பாட்டு
6-00 ஸ்ரீ ராமமூர்த்தி அய்யர் வாய்ப்பாட்டு
6-30 ஸ்ரீ குப்புசாமி வாய்ப்பாட்டு
6-45 ஸ்ரீமதி ஹிரிணயம்—தமிழ் நாடகம் அ. இ. ரே. நடிகர்கள்
7-30 காரைக்குடி ஸ்ரீ சீனிவாசய்யங்கார் பாட்டு
8-10 அ. இ. ரே. வாத்தியக் கோஷ்டி
8-20 காரைக்குடி ஸ்ரீ சீனிவாசய்யங்கார் வாய்ப்பாட்டு
9-20 கோனுன் இல்லாத மங்கை—இங்கிலீஷ் பேச்சு
9-35 ஸ்ரீமதி சௌந்திர ராஜம் வெங்கடேசன் வாய்ப்பாட்டு
*9-35 ஐரோப்பிய சங்கீதம்
10-20 அ. இ. ரே. வித்வான் கோட்டு வாத்தியம்

★

## 10உ திங்கள்

மாலை
5-00 ஸ்ரீமதி சுந்தரவல்லி பங்காருஸ்வாமி வாய்ப்பாட்டு
5-30 ஸ்ரீ டி. ஆர். நாராயண ஸ்வாமி வாய்ப்பாட்டு
6-00 ஸ்ரீ ரிக்காட் ஜே. சிங் தமிழ், மலையாளப் பாட்டுகள்
6-30 ஸ்ரீ நாராயண ஸ்வாமி வாய்ப்பாட்டு
6-45 ஸ்ரீ ஆர். நாராயண ஸ்வாமிப் பிள்ளை
6-50 ஸ்ரீமதி கே. வி. ஜானகியும் ஸ்ரீ எஸ். ஆர். வெங்கடேசனும் இசைப் பாட்டு
7-00 அ. இ. ரே. வாத்தியக் கோஷ்டி—கல்யாணி
7-15 ஆகாயப் பிரயாணம் ஸ்ரீ ஆர். சீதாராமன் தமிழ்ப் பேச்சு
7-30 முடிகொண்டான் ஸ்ரீ வி. வெங்கட்ராமய்யர் வாய்ப்பாட்டு
9-20 சென்னையும் சுற்றுப்புறமும் டாக்டர் வி. மீனாட்சி இங்கிலீஷ் பேச்சு.
9-35 ஐரோப்பிய சங்கீதம்
*9-35 ஸ்ரீ வி. சேதுராமய்யாவும் ஸ்ரீ. ஆர். கே. வெங்கட்ராம சாஸ்திரியும் பிடில்.

★

## 11உ செவ்வாய்

மாலை
5-00 ஸ்ரீ. எஸ். நாராயணய்யர் வாய்ப்பாட்டு
5-30 மிஸ். எம். ஏ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் வாய்ப்பாட்டு
*6-00 ஆர்க்கெஸ்ட்ரா ரிகார்டுகள்
*6-05 நடப்பு விலைவாசிகள்
*6-10 வலிமை பொருந்திய சமாஜத்தைச் சமைத்தல் தமிழ் பேச்சு
6-15 அ. இ. ரே. வித்வான் ஜலதரங்கம்
*6-20 ஸ்ரீமதி கே. அஸ்வத்தம்மா டாக்கி பாட்டுக்கள்
6-30 சாரங்கதரா—தமிழ் நாடகம் (ரிகார்டு செய்யப்பட்டது)
7-05 அ. இ. ரே. வாத்திய கோஷ்டி
7-30 ஸ்ரீமதி நாகம்மா— வாய்ப்பாட்டு
8-30 ஸ்ரீ டி. கே. ராதாகிருஷ்ணன்—புல்லாங்குழல்
9-20 வர்த்தகத்தின் மிச்சம்—ஜி க்ளீட்டஸ் இங்கிலீஷ் பேச்சு
*9-35 ஸ்ரீமதி நாகம்மா—வாய்ப்பாட்டு
*10-00 ஸ்ரீ டி. கே. ராதா கிருஷ்ணன் புல்லாங்குழல்

★

## 12உ புதன்

மாலை
5-00 ஸ்ரீ எம். எஸ். முத்துகிருஷ்ணன் வாய்ப்பாட்டு
5-30 ஸ்ரீ எம். ராமஸ்வாமி பிள்ளை ஜலதரங்கம்.
6-00 ஸ்ரீ முத்துகிருஷ்ணன் வாய்ப்பாட்டு
6-15 புல்லாங்குழலும் பிடில்களும்—அ. இ. ரே. வித்வான்கள்
6-30 ஸ்ரீ எம். ராமஸ்வாமி பிள்ளை ஜலதரங்கம்
7-00 வீணையும் கோட்டு வாத்தியமும்
7-10 பேச்சில் தன்னம்பிக்கை யில்லாமை—ஸ்ரீ டி. செங்கல்வராயன் தமிழ் பேச்சு
7-30 ஸ்ரீ செவலி கிருஷ்ண மூர்த்தி வாய்ப்பாட்டு
8-30 ஸ்ரீமதி வி. எஸ். ராஜம் வாய்ப்பாட்டு
9.35 ஸ்ரீ வி. சந்தானமய்யா பிடில்
*9.35 ஐரோப்பிய சங்கீதம்

★

## 13உ வியாழன்

மாலை
5-00 வேலூர் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை வாய்ப்பாட்டு
*6-05 நடப்பு விலைவாசிகள்
*6-10 கிராம முன்னேற்றம் திவான்பகதூர் கே. தெய்வசிகாமணி முதலியார் பிரசங்கம்
6-15 அ. இ. ரே. வித்வான் வீணை
*6-20 ஸ்ரீமதி வி. எஸ். ராஜமும் ஸ்ரீ ஜி. எஸ். விஜயராவும் இசைப்பாட்டு
6-40 கிருஹப்ரவேசம்-தமிழ் ஹாஸ்யம்
7-00 பெருவெள்ளம்—மலையாள நாடகம்
7-30 கௌசல்யா பரிணயம்—ஹரிகதா காலக்ஷேபம்—பட்டம் வெங்கட்ராமய்யர்
8-30 ஸ்ரீ எ. கே. சுப்பராவ் புல்லாங்குழல்
9-35 ஐரோப்பிய சங்கீதம்
*9-35 ஸ்ரீ எ. கே சுப்பராவ் புல்லாங்குழல்

# கப்பல் செய்திகள்

பினங்குக்கும்
நாகபட்டினத்திற்கும்
(ஏஜெண்டிடமிருந்து)

வருதல்

கப்பல்கள், மலாய் நாட்டிலிருந்து நாகபட்டணத்துக்கு வரும் தேதி வருமாறு:—

| | |
|---|---|
| தலாம்பா 8018 டன் | 13—4—39 |
| ரஜுலா 8478 டன் | 27—4—39 |
| ரோணு 8602 டன் | 11—5—39 |

புறப்படுதல்

கப்பல்கள் நாகபட்டணத்திலிருந்து மலாய் நாட்டுக்குப் புறப்படும் விவரம் வருமாறு:—

| | |
|---|---|
| ரஜுலா 8478 டன் | 8—4—39 |
| ரோணு 8602 டன் | 22—4—39 |
| ரஜுலா 8478 டன் | 6—5—39 |

பிரஞ்சு மெயில்

புதுச்சேரியிலிருந்து சிங்கப்பூர், சைகோன் புறப்படும் கப்பல்கள்:-

| | |
|---|---|
| போர்தோஸ் 19000 டன் | 11—4—39 |
| ஆந்திரே லெபோன் 20,000 டன் | 8—5—39 |
| தர்தாஞான் 21000 டன் | 5—6—39 |

பிரேஞ்சு-மெயில் விவரங்களுக்கு:
H. B. ஹாசேன் & சன்ஸ்,
கப்பல் ஏஜண்டுகள், புதுச்சேரி.

P. & O. மெயில்

கொழும்பிலிருந்து, நேராக பினங்குக்குப் புறப்படும் கப்பல்களின் விவரம் வருமாறு:—

| | |
|---|---|
| கார்தேஜ் 15,000 டன் | 2—4—39 |
| ராஜபுதானா 17,000 டன் | 16—4—36 |

# ரயில் வண்டிப் போக்கு வரத்து

| வண்டியின் நிர். .... | 25 | 1 | 67 | 33 | 29 | 31 | 7 |
|---|---|---|---|---|---|---|---|
| திருச்சி புறப்படும் நேரம் | 3-57 | 7-30 | 10-40 | — | 13-20 | 17-27 | 22-15 |
| புதுக்கோட்டை ஷை | 5- 6 | 8-41 | 12- 9 | — | 14-42 | 19- 0 | 23-42 |
| சமுனசமுத்திரம் ஷை | 5-17 | 8-52 | 12-19 | — | 15-0 | 19-11 | — |
| திருமயம் | 5-31 | 9-8 | 12-32 | — | 15-13 | 19-25 | 0- 5 |
| காரைக்குடி ஷை | 6-15 | 10- 1 | 13-12 | 14-27 | 16-39 | 20-35 | 0-57 |
| தேவகோட்டை ரோடு | 6-25 | 10- 9 | — | 14-35 | 16.47 | 20-48 | — |
| நாட்டரசன்கோட்டை | 7-13 | 10-48 | — | 15-21 | 17-33 | 21-25 | 1-52 |
| சிவகெங்கை ஷை | 7-25 | 10-59 | — | 15-42 | 17-52 | 21-36 | 2-4 |
| மானாமதுரை சேரும் நேரம் | 8- 2 | 11-30 | — | 16-14 | 18 24 | 22- 5 | 2-33 |
| **வண்டியின் நிர். ....** | **286** | **284** | **546** | **290** | **284** | **288** | |
| மானாமதுரை புறப்படும் நேரம் | 8-20 | 11-52 | 15-10 | 16-35 | 18-40 | 23-25 | |
| மதுரை சேரும் நேரம் | 9-37 | 13-15 | 16-22 | 17-58 | 20-0 | 0-44 | |
| **வண்டியின் நிர். ....** | **287** | **289** | **545** | **281** | **285** | **283** | |
| மதுரை புறப்படும் நேரம் | 1 18 | 6-42 | 10-33 | 13-30 | 15-32 | 17-14 | |
| மானாமதுரை சேரும் நேரம் | 2-27 | 7.55 | 11-45 | 14-43 | 17-1 | 18-32 | |
| **வண்டியின் நிர்.....** | **32** | **68** | **30** | **2** | **34** | **26** | **8** |
| மானாமதுரைபுறப்படும்நேரம் | — | 8-14 | 12-15 | 15-13 | 17-18 | 18-55 | 23-17 |
| சிவகெங்கை ஷை | — | 8-49 | 12-51 | 15-41 | 17-53 | 19-29 | 23-49 |
| நாட்டரசன்கோட்டை ஷை | — | 9-0 | 13- 2 | 15-52 | 18-4 | 19-40 | 0-1 |
| தேவகோட்டை ரோடு ஷை | — | 9-46 | 13-49 | 16-30 | 18-50 | 20-21 | — |
| காரைக்குடி ஷை | 6-50 | 10- 3 | 14- 6 | 16-47 | 18-57 | 20-38 | 1-4 |
| திருமயம் ஷை | 7-24 | 10-35 | 14-41 | 17-20 | — | 21-13 | 1-42 |
| சமுனசமுத்திரம் ஷை | 7-38 | 10-48 | 14-58 | 17-33 | — | 21-27 | — |
| புதுக்கோட்டை ஷை | 7-53 | 11-3 | 15-13 | 17.50 | — | 21-49 | 2-10 |
| திருச்சி சேரும் நேரம் | 9-32 | 12-30 | 16-42 | 19- 0 | — | 22-58 | 3-36 |

குறிப்பு:— 33—29-நிர். இரண்டு வண்டிகளும் நேரே மதுரை ஜங்ஷனுக்குப் போகின்றன. 26—8-நிர். இரண்டு வண்டிகளும் நேரே திருச்சி-கார்டு லயன் வழியாக சென்னை எழும்பூர் போகின்றன.





(1-ம்பக்கத் தொடர்ச்சி)

ஆராய்ந்து எடுத்து அனுபவிக்கின்றவாணன் என்று குறிப்பிடப்படுகிறது. அப்படிப்பட்ட வாணனின் பெயரை எழுதிக்கொள்ளாத ஒரு மார்பாவது உண்டோ? மறுபடியும் தனிச் சிரில் வாணன் என்று மூன்றுந்தரம் உரைப்பது கவனிக்கத்தக்கது. மரங்களிலுள்ள ஒரு கொம்பாவது அவனுடைய கொடி தாங்காதிருக்கிறதா? அவன் காலின்கீழ்ப் படாத அரசருமுண்டோ? என்று மிக அழகாக இந்தப் பாட்டை அவர் பாடியிருக்கிறார்.

கவிகள் கற்பனையில் காணும் உண்மையான விஷயங்களை எழுதுகிறார்கள். நித்திய ஆனந்தத்தைத் தரக் கூடியது கவியின் கற்பனைதான். இதுதான் தமிழ். இதைச் சொல்லிக்கொண்டே இருக்கலாம். சோர்வே ஏற்படாது எளிமை! எவ்வளவு எளிமை! கவி சிருஷ்டி தத்துவத்தில் முழுதும் நிரம்பிப் பரிணமிக்கிறது. இப்படி ஒரு பாட்டா? பதினாயிரம். கம்பனைத் தவிர வேறு யாரால் முடியும்?

உண்மைப்பூவும் காகிதப்பூவும்

கம்பனுடைய கவியில் ஒரு தத்துவம். இதை அறிகிற வரையில் கவியை அனுபவித்ததாகச் சொல்ல முடியாது. கம்பனுடைய கவியை அறிகிற வரையில் மற்றக் கவிகளையும் கவிகள் என்றேதான் எண்ணுவார்கள். உண்மைத் தாமரைப் பூவைப் பார்க்கிற வரையில் ஜப்பான்காரன் செய்யும் காகிதப் பூவும் பூ தான். தாமரை மலர் மலர்ந்து அதன் அழகை அனுபவிக்க ஆரம்பித்தால் காகிதப் பூவின் தன்மை விளங்கிவிடு மல்லவா?

கவிகள்தான் பாக்கியசாலிகள்

கவியைப் படிக்கும் பொழுது நித்துவமில்லாத ஆனந்தம் ஏற்படுகிறது. அப்படியானல் இதைப் பெற்றெடுத்த தாய்க்கு எவ்வளவு ஆனந்தம் இருக்கும்? கவிகள்தான் உலகிலேயே பாக்கியசாலிகள், மகிழ்ச்சியாளர்கள். அவர்கள்தான் உலகத்திலெல்லாம் செல்வம் நிறைந்தவர்கள். ஆனந்தத்தில் திளைப்பவர்கள்.

தமிழின் பாவ உணர்ச்சி

தமிழ்க் கவியிலுள்ள பாவத்தையறிய தமிழராகப் பிறந்திருக்கவேண்டும். தமிழ் ஆசிரியரிடத்துப் பாடங் கேட்காதிருக்க வேண்டும். பாவமில்லாத பாட்டுகளைச் சொல்லிக்கொடுத்து ஆர்ப்பாட்டம் செய்கிறார்கள். பாவம்—அதற்கு எளிமை வேண்டும். கலை

## நடப்பு வட்டி விகிதங்கள்

| மாதம் | நாள் | சென்னை | ரெங்கூன் | பினங்கு | சிங்கப்பூர் | செய்கோன் |
|---|---|---|---|---|---|---|
| ஈஸ்வர பங்குனி | 30 | 0-7-3 | 0-5-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 |
| வெகுதானிய சித்திரை | 31 | 0-7-3 | 0-4-6 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| வைகாசி | 32 | 0-7-3 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| ஆனி | 31 | 0-6-9 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| ஆடி | 32 | 0-6-3 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| ஆவணி | 31 | 0-6-3 | 0-4-0 | 0-4-8 | 0-4-0 | 0-4-0 |
| புரட்டாசி | 30 | 0-6-3 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| ஐப்பசி | 30 | 0-6-3 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| கார்த்திகை | 30 | 0-6-3 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| மார்கழி | 29 | 0-6-0 | 0-4-6 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| தை | 29 | 0-6-6 | 0-4-9 | 0-4-6 | 0-4-3 | 0-4-0 |
| மாசி | 30 | 0-6-6 | 0-5-0 | 0-4-6 | 0-4-3 | 0-4-0 |

காரைக்குடியில் கம்பர் விழா

# திரு. டி. கே. சிதம்பரநாத முதலியார் பிரசங்கம்

மகள் கவியை வளர்த்தாள். கடைசியில் கம்பனையும் அளித்தாள். இதை மறக்க முடியுமா?

ஆங்கிலேயரும் கவியும்

"ஆங்கிலேயர்கள் கூட்டத்தில் 'வெடிகுண்டு வருகிறது' என்று சொன்னால் கூடப் பயப்படமாட்டார்கள். ஆனல் கவி என்றால் எடுத்துவிடுவார்கள் ஓட்டம்" என்று ஒரு ஆங்கிலேயரே எழுதியிருக்கிறார். அப்படியானல் 5000 மைல்களுக்கு அப்பாலுள்ள அல்லது இப்பாலுள்ள நமக்கு ஆங்கிலேயக் கவி எப்படி யிருக்கும்? "நம்முடைய தாய் பாஷையிலுள்ள கவிகளை அறிய முயற்சிப்பதை விட்டு பிற பாஷைகளிலுள்ளவற்றை மொழி பெயர்த்து அனுபவிக்க எண்ணுவதானது, தமது மனைவியிடத்திலிருந்து அன்பைப் பெறுவதற்கு வக்கீலைத் தேடுவதற் கொப்பாகும்" என்று தாகூர் சொன்னார்.

(தாகூர் ஆங்கிலத்தில் சொன்னவை கீழே தரப்படுகிறது.)

"Trying to understand the soul of poetry through a language which is not your mother-tongue is just like trying to get the smiles of your sweet-heart through your attorney."

Tagore's speech at Midland Theatre, Madras (1935)

சிற்பச் செல்வம்

தமிழை விதைக்க, நல்ல நிலம் செட்டிமார் நாடு தான். இங்கு சிற்பச் செல்வம் செழித்து ஓங்கி நிற்கின்றது. கோயில்களும், கோபுரங்களும் ஏராளமாகக் கட்டியிருக்கிறீர்கள். உலகில் எங்கும் காணாத இந்தக் கோபுரக் காட்சியை, சிற்பச் செல்வத்தை, சென்னை முதல் கன்யாகுமரிவரைக் காண்கின்றோம். வேறு உலகில் எங்குமில்லை. இதுகலைச் செல்வம். தஞ்சையில் ஒரு அழகிய சுப்பிரமணியர் கோவிலிருக்கின்றது. அதனைப்பார்த்து வியந்து ஒரு ஆங்கிலேயர், இது தமிழர் கட்டியதல்ல, டச்சுகாரர் கட்டியதாயிருக்க வேண்டும் என்று எஸ். ஐ. ஆர். கைடில் எழுதியிருக்கிறார். அவருக்குப் பதிலளிக்கத்தக்கவர் நீங்கள் தான். தமிழர் கட்டியது தான்; அவர்களால் மட்டுமே கட்டமுடியுமென்பதை இன்றும் நிதர்சனமாகக் காண்பித்து வருகிறீர்கள்.

நாட்டுக்கலை

அந்தந்த நாட்டுக்கலை அவரவர்க்கே உரியது. அதை ஒரு நாட்டிலிருந்து இன்னொரு நாட்டுக்குக் கொண்டு போக முடியாது. தமிழை வேறு எங்கே இவ்வளவு ஆர்வத்துடன் கற்கிறார்கள்? பக்தியோடு உங்களைத் தவிர வேறு யார் கற்கிறார்கள்? வருவாய்க்காகக் கற்கும் கல்வியும் ஒரு கல்வியா? ரூபாய் வழியாகப் பார்த்தால், தமிழ் நயத்தை உணர முடியுமா?

காதல் கவி

காதல் கவி தமிழில் இருக்கிறதா என்று ஆங்கிலம் படித்த நண்பர் ஒருவர் கேட்டார். ஆங்கிலத்தில் காதல் கவி யென்றால், அதில் காதலி செத்த பிறகு லபோ லபோ என்று காதலன் அடித்துக்கொள்வான். அல்லது காதலி வேறு கல்யாணம் செய்த பிறகு அந்த ஏமாற்றத்தோடு பாடியதாக இருக்கும். பெரும்பாலும் இப்படித் தான். கவியில் உண்மை யல்லவா வர வேண்டும்? காதல் தத்துவம் நிரம்பி, புடைத்து வரவேண்டும்.

குறவஞ்சி

குற்றாலக் குறவஞ்சி 250 வருஷங்கட்கு முன் பாடப்பட்டது. அதில் கவி, கண்டவுடன் காதல் ஏற்பட்ட விதத்தை எவ்விதமாக வர்ணித்திருக்கிறார் என்பதைப் பாருங்கள். வசந்தவல்லி சிறு பெண். பந்து விளையாடிக் கொண்டிருக்கிறாள். அந்த வேளை, குற்றால நாதர் பவனி வந்தார். அவரைப் பார்த்து அவள் இவ்வாறு எண்ணுவதாகக் கவி காட்டுகிறார்:

முனிபரவும் இனியானோ? வேத
    முழுப்பலவின் கனிதானோ?
கனியில் வைத்த செந்தேனோ
    பெண்கள், கருத்துருக்க வந்தானோ!
தினகரன்போல் சிவப்பழகும் அவன்
    திருமிடற்றில் கறுப்பழகும்
பனகமணி இருகாதுங் கண்டால்
    பாவையுந்தான் உருகாதோ!
வாகனைக்கண் டுருகுதையோ—ஒரு
    மயக்கமதாய் வருகுதையோ
மோகமென்ப திது தானோ—

என்று தன்னைத் தானே கேட்டுக் கொள்கிறாள்.

கம்பன் கவி

காதலைக் கம்பன் எப்படி சித்திரிக்கின்றான் என்பதை அறியவேண்டுமானல் அனுதாபத்தோடு பார்க்க வேண்டும். உள்ளேயிருக்கிற பாவத்தைக் கவனிக்கும் போது வெறும் சொல்லெல்லாம், அசையெல்லாம் தாமாகவே மறைந்து போகவேண்டும். ராமன் சௌந்தர்யத்திலே சூர்ப்பணகை ஈடுபட்டு விட்டாள். சீதையைத் தொலைத்து விட்டால் ராமனை எளிதில் அடைந்து விடலாமென்ற அவளது முயற்சியில் மூக்கு அறுபட்டது. இனி ராவணனிடம் தூண்டி, அவனைக் கொண்டு, அதிகாரம் செலுத்தி, ராமனைத் தன் வசப்படுத்திக் கொள்ளலாமென்று கோட்டை கட்டினாள். அவள் ராவணனிடம் சீதையைப்பற்றி வர்ணிக்கிறாள். இந்த இடத்தில் கவி அமைத்துள்ள பாட்டில் காதல் சுவை எப்படிப் புரண்டு உருண்டு ஓடிக்கொண்டிருக்கிறது என்பதைப் பாருங்கள். 'உனக்கு இதுவரையில்லாத ஒரு பாக்கியம் கிடைக்கப் போகின்றது' என்று ஆரம்பிக்கின்றாள். "உனது வீரத்துக்குத் தகுந்த ஒரு பெண்ணில்லை. அப்பேர்ப்பட்ட ஒரு பெண் கிடைக்கப்போகிறாள்; உலகத்தாரெல்லாரும் உன்னைப்புகழப் போகிறார்கள்".

"மீன் கொண்டோடும் வேலை
    மேகலை உலகம் ஏத்தத்
தேன் கொண்டோடும் கூந்தல்
    சிற்றிடைச் சீதையென்னும்
மான் கொண்டோடும் நீயுன்
    வாள்வலி உலகங் காண
யான் கொண்டோடும் வண்ணம்
    இராமனைத் தருதி யென்பால்"

"உனது வாள்வலியை உலகம் போற்றும்படி ராமனைத் தருதி யென்பால்" என்று கேட்கின்றாள். "நீ என்னிடம் ராமனைச் சேர்த்துவிட்டால், உலகத்துக்கு உன் வாள் வலி தெரிந்துவிடும்" அவள் சொல்கிறசொல்லில் காதல் குலவுவதைக் காண்கின்றோம். அவள் உள்ளத்தில் திமிறிக் கொண்டிருக்கும் காதலுணர்ச்சி கவியில் மீன்மாதிரி புரண்டு உருண்டு வருவதைக் காண்கின்றோம். இந்தமாதிரி ஒரு காதல் கவியைக் காண்பது வெகு அருமை.

இன்னொரு கவி

சீதை ராமனைப்பார்த்து அவனுடைய சௌந்தர்யத்தில் ஈடுபட்டு விட்டாள்.

நாணுலா வில்லினோடு
    நாணுலாவு பாணியும்
தூணுலாவு தோளும் வாளியோ
    டுலாவு தூணியும்
வாணிலா வினுலாவுமாலை
    மார்புமீளவும்
காணலாகு மாகினுவி
    காணலாகும்ஆகுமே.

விண்டலங் கலந்திலங்கு
    திங்களோடு மீதுசூழ்
வண்டலம் பலங்கறங்கு
    பங்கியோடும் வ[illegible]
கொண்ட லோன் றிரண்டு கண்ணின்
    மொண்டு கொண்டென்னுவியை
உண்டதுண்டெனெஞ் சினின்று
    முண்டதென்று முண்டரோ.

## ஆலயப்பிரவேச சட்டம்

வாக்காளர் ஜாப்தா தயாரிக்க

மலையாள ஆலயப்பிரவேச மசோதாவை அமுலுக்குக் கொண்டுவருவது சம்பந்தமாக, ஜில்லா கலக்டர் சட்டசபைகளின் தேர்தல்களில் வாக்களிக்க யோக்கியதையுள்ள சாதி இந்து வாக்காளர்களின் ஜாப்தாக்களைத் தயாரிப்பார். அதன் பின்னர் ஏதாவது ஒரு குறிப்பிட்ட கோவிலை ஒதுக்கப்பட்டவர்களுக்குத் திறந்துவிட விடக்கூடாதா என்பதுபற் கெடுக்கப்படும். குருவாயூர் சீர்திருத்தத்தை அமுலுக் வர சீர்திருத்த வாதிச பாடுகளைச் செய் —

## மகனைப் பலியிட

### ஜில்லா மாஜிஸ்திரேட் அனுமதி கோரப்பட்டது!

சித்தூர் (மதுரை ஜில்லா) தலையாரி சுப்பன் பண்டாரத்துக்கு மூன்று பெண் குழந்தைகள். ஒரு ஆண் குழந்தை பிறந்தால், பழனி சுப்பிரமணிய சுவாமிக்கு அதைப் பலிகொடுப்பதெனத் தீர்மானித்தான். இரண்டு மாதத்தில் அவனுக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. குழந்தையைப் பலியிட்டுப் பழனிக்குக் காவடி யெடுக்க வேண்டுமென்று சுவாமி கனவில் தோன்றிச் சொன்னாராம்! எனவே காவடிக்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் நடைபெற்றன. பலியிடு முன் ஜில்லா மாஜிஸ்திரேட்டின் அனுமதியை வாங்கிக் கொள் என்று கிராமத்தார் சொன்னதின் மேல், மதுரை ஜில்லா மாஜிஸ்திரேட்டிடம் சுப்பன் பண்டாரம் தனக்கு 9 நாள் ரஜா வேண்டுமென்றும், தன் மகனைப் பலியிட அனுமதி வேண்டு மென்றும் மனுச் செய்தான். ஜில்லா மாஜிஸ்திரேட் மிஸ்டர் ஜே. ஆர். பெட் தகவல் அறிவித்ததன் மேல், வடமதுரைப் போலீஸார் சுப்பன் பண்டாரத்தையும் அவன் மனைவியையும் திண்டுக்கல் சப் மாஜிஸ்திரேட்டிடம் ஆஜர் செய்ய, அவர் போலீஸார் வசம் ஒப்புவித்தார். சுப்பன் பண்டாரத்தின் மூன்று பெண் குழந்தைகளும் மதுரை குழந்தைகள் சகாய விடுதிக்கு அனுப்பப்பட்டனர். பலிக்கு ஆளாக நின்ற குழந்தையை மிஸ்டர் பெட்டும் அவர் மனைவியும் எடுத்து அய்யலூர் கர்ணம் வசம் பந்தோபஸ்தாகப் பாதுகாத்து வரும்படி கொடுத்தனர்.

### சிசு சம்ரக்ஷணசாலை

(நமது நிருபர்)

தேவகோட்டைமுனிசிபல்பெண்கள் ஆஸ்பத்திரி காம்பவுண்டுக்குள் சிசுசம்ரக்ஷண சாலைக்காகப் புதிதாக அமைக்கப்பட்ட கட்டிடத்தை மார்ச் 30உ காலை சுமார் 9 மணிக்கு ஸ்ரீமதி சிவராமன் திறந்துவைத்தார். சாலையில் இருந்த 4 குழந்தைகளை கூட்டத்திற்கு வந்திருந்தவர்கள் கலக்டர் முதலியோர்கள் பார்வையிட்டனர். அதில் 29—3—39 மாலை பிறந்த குழந்தையும் பார்வையிடப்பட்டது. அவைகள் நிறுக்கப்பட்டன. பிறகு முனிசிபல் கமிஷனர் ஜனப் அப்துல் ஹமீது சாகிப் வந்தனங் கூறக் கூட்டம் நிறைவெய்தியது.

### முனிசிபல் பள்ளிக்கூடம்

#### இரவு சேரியில் திறப்பு விழா

(நமது நிருபர்)

தேவகோட்டை முனிசிபாலிட்டியைச் சேர்ந்த இரவு சேரி கிராமத்தில் மார்ச் 30உ காலை 9–30 மணிக்கு ஒரு எலிமெண்டரிப் பாடசாலை சப் கலக்டர் ஸ்ரீ சிவராமனால் திறந்து வைக்கப்பட்டது. இந்த விழாவிற்கு ஸ்ரீமதி சிவராமன், தேவகோட்டை ஜமீந்தார், ஸ்ரீமதி அப்துல் ஹமீது, ஸ்ரீமதி கமலா சிவசுப்பிரமணியம், ஹரிஜன் ரெங்கண்ணு ஆகியோர் விஜயம் செய்திருந்தனர்.



## தங்க இருப்பு

சர்வதேச சங்கக் கணக்குப்படி 1939-ஆரம்பத்தில் பாங்குகள் வசம் இருப்புள்ள தங்கத்தின் அளவு 1,576½ கோடி தங்க டாலர்கள் (இது பழய விலை மதிப்புப்படி; புதிய விலை மதிப்புப்படி இது 2,667½ கோடி டாலராகும்) இதில் நேர்பகுதிக்கு மேல் அமெரிக்காவிலும், எட்டில் ஒரு பாகம் கிரேட் பிரிட்டனிலும், (பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் முழுவதிலும் ஏழில் ஒரு பாகம்தான் இருக்கிறது) பிரான்ஸில் பதினொன்றில் ஒரு பாகமும் இருக்கின்றது. உலகிலுள்ள மூன்று பெரிய ஜனநாயக தேசங்களில் உலகத் தங்க இருப்பில் சுமார் 80 சதமானம் இருப்பது இதினின்றும் தெளிவாகின்றது. சர்வாதிகார தேசங்கள் வசம் இருப்புள்ள தங்கம் மிகச் சொற்பந்தான். பதினைந்து தேசங்கள் வசமிருப்புள்ள தங்கத்தின் அளவை, உலகத்துத் தங்க இருப்பின் சதமானத்தில் கணக்கிட்ட புள்ளி விவரம் வருமாறு.—

| | சதமானம் |
|---|---|
| அமெரிக்கா | 54·4 |
| பிரிட்டன் | 12·9 |
| பிரான்ஸ் | 9·1 |
| நெதர்லாந்து | 3·7 |
| சுவிஸர் லாந்து | 2·6 |
| பெல்ஜியம் | 2·0 |
| ஸ்பெயின் | 2·0 |
| ஆர்ஜன்டைன | 1·6 |
| ருஷ்யா | 1·4 |
| ஸ்வீடன் | 1·2 |
| இந்தியா (பிரிட்டிஷ்) | 1·0 |
| தென் ஆபிரிக்க யூனியன் | 0·8 |
| இத்தாலி | 0·8 |
| கானடா | 0·7 |
| ஜப்பான் | 0·6 |

### தேவகோட்டையில் பந்தயங்கள்

(நமது நிருபர்)

தேவகோட்டையில் மார்ச் 31உயும் ஏப்ரல் 1உயும் மாட்டு வண்டிகளில் ஒற்றை மாடு, இரட்டை மாடு, இதிற் பெரிது, சிறிது ஆக நாலுவகையாகப் பிரிக்கப்பட்டு தேவகோட்டை காட்டுத் தண்ணீர் பந்தலுக்கும், அமராவதிபுதூருக்கும் இடையில் உள்ள தேவகோட்டை மெயின் ரஸ்தாவில் சுமார் 6 மைல் தூரம் பந்தயம் ஓட்டப்பட்டது. இதற்கு கலக்டர் விஜயம் செய்திருந்தார். இவைகளில் ஜெயித்த மாடுகளுக்கும் இரண்டாவதாக வந்த மாடுகளுக்கும் வெள்ளி அரசிலைகள் கோக்கப்பட்டு மத்தியில் தங்கம் இடப்பெற்ற வெள்ளிச் சங்கிலிகளும், அரசிலைகள் கோக்கப்பட்ட வெள்ளிச் சங்கிலிகளும் முறையே பரிசுகளாக வழங்கப்பட்டன. சைக்கிளை மெதுவாக ஓட்டுவதில் முதல் பரிசுபெற்றவருக்கு தங்கப் பதக்கமும், இரண்டாவது பரிசு பெற்றவருக்கு வெள்ளிப் பதக்கமும், அதிவேகமாக வந்த குதிரைக்கு வெள்ளி மணிகள் கட்டிய தலையில் நிறுத்திவைக்கும் வெள்ளி ஜெண்டாக்களும் வழங்கப்பட்டன.













காரைக்குடி நகரசபை

## நடப்பு வருஷத்துக்கு வரியை உயர்த்த வேண்டியதில்லை

### சர்க்கார் குறிப்பு

#### கல்லுக்கட்டி ஊருணி உத்தரவை ரத்து செய்ய வேண்டுகோள்

(நமது நிருபர்)

காரைக்குடி நகர சபையின் சாதாரணக் கூட்டம் ஒன்று 31-3-39 வெள்ளிக்கிழமை மாலை 4-55 மணிக்கு நகர சபை மண்டபத்தில் சேர்மென் ஸ்ரீ ராய. சொக்கலிங்கன் தலைமையில் கூடியது. எட்டு அங்கத்தினர்கள் வந்திருந்தார்கள். கீழ்க்கண்ட பல விஷயங்கள் முடிவு செய்யப்பெற்றன.

பஸ் ஸ்டாண்டு லைசென்ஸ்

1939-40 வருஷத்துக்கு லைசென்சை புதுப்பிக்கவேணுமாய் கோரிவரலான ஸ்ரீ ரத்னவேலுச்சாமி செட்டியாரின் மனு யோஜிக்கப்பெற்று கக்கூசுக்கு லேட்போட்டுக் கொடுக்க வேண்டுமென்ற நிபந்தனையின் பேரில் லைசென்ஸ் கொடுப்பதென முடிவு செய்யப்பெற்றது.

முனிசிபல் விளம்பரங்கள்

முனிசிபல் சம்பந்தமான எல்லா விளம்பரங்களையும் உள்ளூர் பத்திரிகைகளில் தான் விளம்பரம் செய்ய வேண்டும். அவ்விதம் செய்வதில் வரிசைக் கிரமமாக எல்லா பேப்பர்களுக்கும் விளம்பரங்கள் கொடுக்கப்படும். ரேட்டு இஞ்சு ஒன்றுக்கு அணா எட்டு வீதம் கொடுக்கலாம். வேலைக்கு விண்ணப்பங்கள் வரவழைக்க வேண்டிய விளம்பரங்களை சென்னை ஹிந்து பேப்பரில் ஒன்று விட்டு ஒருநாள் பிரசுரம் செய்யலாம் என்ற கமிஷனரின் குறிப்பு அங்கீகரிக்கப்பெற்றது.

வரி விதிப்பு உயர்வு

1-4-39 தேதியிலிருந்து தொழில் வரி விதிப்பை உயர்த்தவேண்டுமென்ற வரி விதிப்பு பொருளாதாரக் கமிட்டியின் தீர்மானமும் அதன் பேரில் 1939-40 வருஷத்துக்கு வரியை உயர்த்த முடியாதென்ற சர்க்காரின் குறிப்பும் யோசிக்கப்பெற்று ஷை குறிப்பை ரிக்கார்டு செய்து கொள்வதுடன் அடுத்த வருஷத்துக்கு நோட்டிபிகேஷன் செய்து 1-10-39 முதல் வரி விதிப்பை உயர்த்துவதென்று முடிவு செய்யப்பெற்றது.

தெருவை அகலப்படுத்த

ராமசாமி செட்டியார் தெருவை அகலப்படுத்த இடங்கள் வாங்கும் விஷயமாய் வந்துள்ள விலை ஸ்டேட்மெண்டு ரூபா 1352-1-10 ம் சாங்ஷன் செய்யப்பெற்றது.

வாசகசாலைக்கு பியூன்

முனிசிபல் வாசகசாலைகள் சரியாகக் கவனிக்கப்படாததால் வாசகசாலைக்கு வரும் பத்திரிகைகள் காணமல் போகிறதென்று அடிக்கடி புகார்கள் வருவதால் ரூபா 6 சம்பளத்தில் பையன்கள் நியமிக்க வேண்டுமென்ற கமிஷனரின் குறிப்பு யோசிக்கப் பெற்றது. முத்துப்பட்டணம் வாசகசாலைக்கு மட்டும் ரூபா 5 சம்பளத்தில் 1-4-39 முதல் ஒரு பையனை நியமிப்பதென முடிவு செய்யப்பெற்றது.

அக்வயர் செய்யவேண்டியதில்லை

கீழ ஊருணி தண்ணீர்ப்புளிப் பொட்டலில் சுவர் எடுக்கப்பட்டிருப்பதால் பொது ஜனங்கள் போக்கு வரத்துக்கு தடை ஏற்பட்டிருப்பதை உத்தேசித்து ஷை இடத்தை கட்டாய அக்வயர் செய்து ரோட்டு போட்டுத் தரும்படி கேட்டு வரலான ஹைஸ்கூல் உபாத்தியாயர் சங்கத்தின் தீர்மானம் யோசிக்கப்பெற்று தற்பொழுது பணம் கொடுத்து அக்வயர் செய்யவேண்டியதில்லை என முடிவு செய்யப்பெற்றது.

வாட்டர் சப்ளை ஈல்டு டெஸ்ட்

வரும் கோடையில் சரியானபடி ஈல்டு டெஸ்ட் செய்தாலொழிய வாட்டர் சப்ளை எஸ்டிமேட்டில் கண்ட வேலை டெம்பரரியாகத்தான் வைத்துக்கொள்ளவேண்டும் என்றும் கவர்ன்மெண்டு கிராண்டு கிடைக்காதென்றும் வந்துள்ள சானிடரி இஞ்சினியரின்லெட்டர் யோசிக்கப்பெற்றது.

ஏற்கனவே இரண்டுதடவை கடுங்கோடை காலத்திலும் ஈல்டு டெஸ்ட் செய்யப்பட்டு நல்ல நிலைமையிலிருந்து வருகிறது. ஊரின் பிற பகுதியில் தண்ணீர் பஞ்சம் ஏற்பட்டும் இதில் ஏராளமான தண்ணீர் வருகிறது. ஆகவே மீண்டும் ஈல்டு டெஸ்டு செய்ய வேண்டியதில்லை. என்றாலும் அரசாங்க உத்திரவுப்படி ஈல்ட் டெஸ்ட் செய்வதென்றும் இதற்குரிய கிராண்டு தொகையை சாங்ஷன் செய்யும்படி சர்க்காரை மன்றாடிக் கேட்டுக்கொள்வதென்றும் முடிவு செய்யப்பெற்றது.

அவுட் ஏஜன்ஸி ஸ்டாண்டு

தென்னிந்திய ரயில்வே அவுட் ஏஜன்ஸி பஸ் ஸ்டாண்டு லைசென்ஸ் விஷயமாக யோசிக்கப்பெற்று சிறிய பஸ் ஸ்டாண்டாகையால் ரூ 150 வாங்கிக்கொண்டு லைசென்ஸ்கொடுப்பதென முடிவு செய்யப்பெற்றது.

கல்லுக்கட்டி ஊருணி

கல்லுக்கட்டிஊருணியைத்திருப்பிக்கட்டுதல் சம்பந்தமாய் வந்துள்ள அரசாங்கத்தாரின் உத்தரவு படிக்கப்பட்டு கீழ்கண்டபடி தீர்மானிக்கப்பெற்றது:—

கல்லுக்கட்டி ஊருணியைக்குறைத்துக் கட்டுவது சம்பந்தமான அரசாங்க உத்தரவுபடிக்கப்பட்டது. அவ்வுத்தரவுகண்டு இக் கவுன்சில் பெரிதும் வருந்துகிறது. கல்லுக்கட்டி ஊரணி செட்டில் மெண்டுக்கு முந்திய புறம்போக்கு என்று அவ்வுத்தரவில் கூறப்படுவதற்கு எவ்வித ஆதாரமு மில்லை. கல்லுக்கட்டி ஊரணி கவர்ன்மெண்டுக்கோ, கொப்புடைய நாயகி கோவிலுக்கோ பாத்தியதையுடைய தல்ல வென்பதை விளக்கப் பிரிவி கவுன்ஸில் தீர்ப்பு இருக்கிறது.

அந்தக் கேசின் முடிவிலிருந்து கல்லுக்கட்டி ஊரணி 1870-ஷு தாலுகா போர்டுக்கு வந்து, பிறகு யூனியன் போர்டின் கைக்கு வந்து, அதன்பின் முனிசிபாலிடியின் வசமானது. அதைக் குறைத்துக் கட்டி ஒழுங்கு படுத்துவதில், கோவில் டிரஸ்டி போன்ற சம்பந்தமில்லாதவர் தலையிடுவது ஆச்சரியமாகவிருக்கிறது. தங்கள் வசம் உள்ள நடு ஊருக்குள்ளிருக்கும் அசுத்தமான ஊரணியைக் குறைத்து அழகுபடுத்தக் கவுன்சில் தீர்மானித்தது. வேலையும் தொடங்கப்பட்டது. கவர்ன்மெண்டுக்குச் சொந்தமில்லாத ஊரணி விஷயத்தில் கலக்டரைக் கேட்டுச் செய்ய வேண்டுமென்பதில்லை.

வேலை நடந்த மத்தியில் திடீரென வேலையை நிறுத்தும்படி அரசாங்கத்திலிருந்து தந்தி வந்தது. அதன்படி வேலை நிறுத்தப்பட்டது. அதன்பிறகு எத்தனையோ ரிமைண்டர்கள் அனுப்பப்பட்டன. இது சம்பந்தமாகக் கவுன்ஸில் ஒரு டெபுடேஷன் நியமித்தது. அதைச் சந்திக்கத் தேதி குறித்தனுப்புவதாக அரசாங்கத்திலிருந்து பதில் வந்தது. இந் நிலையில் டெபுடேஷனுக்குக் கூடச் சந்தர்ப்பம் கொடுக்காமல் உத்தரவுவந்திருக்கிறது. இது கவுன்ஸிலை அவமதிப்பதாகும். ஜில்லா முனிசிபாலிடிகளின் ஆக்ட் 36-வது பிரிவுப்படி முனிஸிபாலிடிக்குச் சந்தர்ப்பம் கொடுக்காமல் அரசாங்கம் முடிவு செய்தது சரியல்ல.

அவ் வுத்தரவில் கவுன்ஸிலை மிஸ்லெயிடு செய்தார் கமிஷனர் டி. புருஷோத்தம் என்று கூறப்படுகிறது. இது அபாண்டமானது. 125 அடி என்று கவுன்ஸில் நிச்சயப்படுத்தியதற்குக் காரணம் இல்லை யென்று கூறப்படுகிறது. 218க்கும் 208க்கும் கட்டுவதென்பதற்குத்தான் என்ன காரணம்? ஊருணி எவ்வளவுக்குக் குறைக்கப்படுகிறதோ அவ்வளவுக்குச் சுத்தமாக வைத்துக்கொள்ளமுடியும். 125 அடிஒரு போதிய அளவு என்றே கவுன்ஸில் கருதுகிறது.

இந்த ஊருணியை மூடிவிடவேண்டுமென்று இராமனதபுரம் ஜில்லா கலெக்டராக இருந்தவரும் தற்போது செக்ரட்டரியேட்டில் உத்தியோகம் வகிப்பவருமான திரு. கே. ராமுண்ணி மேனன் ஐ. ஸி. எஸ். அபிப்ராயம் தெரிவித்திருக்கிறார். 218க்கும் 208க்கும் என்பதற்கும், இப்போது இருப்பதற்கும் அதிக வித்தியாசம் இல்லை. 218க்கும் 208க்கும் அளவில் கட்டவும் அதைச் சுத்தமாகப் பராமரிக்கவும் ஏராளமான செலவு ஆகும். அச்செலவை ஏற்க முனிசிபாலிடி தயாராக இல்லை.

தெப்போத்ஸவத்தைப்பற்றிப் பிரஸ்தாபிக்கப்படுகிறது. அது நிரந்தரமானது அல்ல. இவ்வளவு காலமாக தெப்பமும் இல்லை. சென்ற ஒரே ஒரு வருஷத்திற்கு மட்டும் டெம்பரரியாகத் தெப்பம் விட முனிசிபாலிடி லைசென்ஸ் கொடுத்தது. அதை முக்கிய காரணமாகக் கூறுவது பொருந்தாது.

இவ் விஷயத்தில் செய்யப்பட்ட உத்தரவை ரத்து செய்து கவுன்ஸிலின் தீர்மானத்தை ஊர்ஜிதம் செய்யும்படி அரசாங்கத்தை இக் கவுன்ஸில் வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறது.

சுகாதாரச் சட்டம்

பொது சுகாதாரச் சட்டத்தின் 9 வது அத்தியாயத்தை காரைக்குடியில் கட்டாய அமுலுக்குக் கொண்டுவர வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக் கொள்வதென்றும் பொது சுகாதார சட்டத்தின் கருத்தை பொது ஜனங்களுக்கு விளக்கிக் காட்டும் பொருட்டு தமிழில் 2000 பிரதிகள் வாங்கிக் கொடுப்பதென்றும் முடிவு செய்யப்பெற்றது

நன்கொடைகள்

தண்ணீர் சப்ளை ரிசர்வாயரில் "கே எம். வி." என்ற வார்த்தைகளடங்கிய நியாம்சன் மோனகிராம் ஒன்று ரூ 150க் கொடுப்பதாக ஒப்புக்கொண்டிருக்கும் ஸ்ரீ P. S. சாத்தப்ப செட்டியாரின் நன்கொடை வந்தனத்துடன் ஒப்புக்கொள்ளப்பட்டது.

(6-ம் பக்கம் பார்க்க)

## விஞ்ஞானம் : விநோதம்

லண்டனில் ஒரு விசித்திரமான பூந்தோட்டம் (பார்க்) இருக்கிறது. இது குருடர்களுக்கென்றே தனியாக அமைக்கப்பட்டிருக்கிறது. ஜெரால்டு ஹெவிட் என்ற அமெரிக்க பாங்கரின் நன்கொடையால் இந்த பார்க் அமைக்கப்பட்டிருக்கிறது. தினமும் நூற்றைம்பதுக்குக் குறையாத குருடர்கள் இங்கு வந்து போகின்றார்கள்.

●

உலகிலேயே மிக உயரமான மனிதன் இல்லிநாயில் (அமெரிக்கா) இருக்கிறான். ராபர்ட் வாட்லோ என்பது பெயர். சமீபத்தில்தான் இவன் தனது இருபத்தோராவது பிறந்த தினத்தைக் கொண்டாடினான். உயரம் 8 அடி 9 அங்குலம்; எடை 491 ராத்தல். ஆறு மாதத்தில் முக்கால் அங்குலம் வீதம் இன்னும் வளர்ந்து வருகிறானாம்.

லண்டனிலுள்ள ஒரு கார்ப்பரேஷனில் வேலைபார்க்கும் பிரௌன் என்பவன் அதிசய சக்தி பெற்றிருக்கின்றானாம். கண்கள் நன்றாகக் கட்டப்பட்டிருக்கும்போதே அவன் பத்திரிகைகளைப் படிக்க முடிகின்றதாம். கட்டுக்கு மேல் கட்டாகப் போட்டுக் கண்ணை இறுகக் கட்டிவிட்டாலும் அவன் கண்ணைத் திறந்து படிப்பது போலவே படிக்கின்றான். படிப்பது மட்டுமல்ல, மோட்டார் சைக்கிள் ஓட்டுவது, சீட்டாடுவது, கிரிக்கட், கால்பந்து முதலிய விளையாட்டுகள் எல்லாம் நடத்துகின்றானாம். பல டாக்டர்களும் விஞ்ஞானிகளும் அவனைப் பரிசோதனை செய்துவிட்டு, அவன் தன் சர்மத்தினூடே பார்க்கும் சக்தி பெற்றிருப்பதாக ஏகோபித்த அபிப்பிராயம் தெரிவித்திருக்கின்றனர்.

●

கிளாஸ்கோவிலுள்ள ஒரு மாஜி ராணுவ சிப்பாய் புதுமாதிரி யந்திர மனிதனைச் செய்து முடித்திருக்கிறான். அது ஒரு 'மின்சார வேலைக்காரன்'. கதவு திறப்பது, போலீஸாரை அழைப்பது, கதவுமணியை அடிப்பது, எப்பொழுது குடையை எடுப்பது அல்லது மழைச் சட்டையைப் போடுவது என்ற விஷயத்தைத் தன் 'எசமான'னுக்குத் தெரிவிப்பது, மின்சார விளக்கை ஏற்றுவது, முதலிய சகல விஷயங்களையும் அது செய்கின்றதாம். பாங்குகளுக்கும், பெரிய கடைகளுக்கும் இந்த 'மின்சார ஊழியன்' உபயோகப்படுமாம். கதவருகில் காவல் வைத்தால், ஒரு பூனை, நாய் வீட்டுக்குள் புகுந்தாலும் உடனேயே தெரிவித்துவிடுகிறதாம். மழை பெய்யப் போவதையும் அறிந்து முன்னதாகத் தெரிவிக்குமாம்.



## காரைக்குடி நகரசபை

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

ஏதாவது தர்மத்திற்காக ஸ்ரீ எஸ். என். நாராயண பிள்ளை ரூ 500 வழங்கியுள்ளதை கே. எம் பி. பார்க்கில் தேகப் பயிற்சிக்கான் கருவிகள் வாங்கலாமென்றுள்ள கமிஷனரின் குறிப்பு அங்கீகரிக்கப்பட்டதுடன் ஸ்ரீ நாராயண பிள்ளையின் நன்கொடையும் வந்தனத்துடன் ஏற்றுக் கொள்ளப்பெற்றது.

### நன்கொடை வாபீஸ் இல்லை

மீட்சாலை ஒன்று கட்டுவதற்காக ஸ்ரீ பீம் சிங் வாக்களித்த நன்கொடை பூராவையும் தன்னால் கொடுக்க இயலாதிருக்கிறதென்றும் ஏற்கனவே கொடுத்திருக்கிற ரூ. 60 வாபீஸ் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டிருக்கும் ஸ்ரீ பீம் சிங்கின் லெட்டர் யோசிக்கப்பெற்று நன்கொடையை வாபீஸ் செய்ய வியலாதென்றும் ஷை தொகையை அவர்கள் குறிப்பிடும் மற்றொரு தர்மத்துக்குச் செலவு செய்யலாமென்றும் தீர்மானிக்கப்பெற்றது.

### ஆபீஸ் கட்டிடம்

முனிசிபல் ஆபீஸ் கட்டிடம் கட்ட 25—3—39ல் ரூ. 32450க்குள்ள எஸ்டிமேட் சாங்கிஷன் ஆகியிருக்கிறது. ஆனால் அந்தத் தொகை கணக்குப் பிழையாக போடப்பட்டது. சரியான தொகை ரூ. 33500. ஷை தொகை சாங்கிஷன் செய்யப்பட்டது.

### அட்வான்ஸ் மறுக்கப்பட்டது

குஷ்டரோக நிவாரண பயிற்சிக்கு திருமணிக்குப் போய்வந்த பிரயாணப்படி ரூ 63—11—0ம் தமக்கு அட்வான்ஸாகத் தரவேண்டுமென்றும் மாகாண நிதியிலிருந்து தனக்குக் கிடைக்கும் பொழுது ஷை தொகையைத் திருப்பித் தந்துவிடுவதாகவும் கேட்டுக்கொண்டிருக்கும் ஹெல்த் ஆபீசரின் லெட்டர் யோசிக்கப்பட்டு அட்வான்ஸ் தர இயலாதென முடிவு செய்யப்பெற்றது.

பிறகு பல மாமூலான விஷயங்கள் பைசல் செய்யப்பெற்று கூட்டம் 7-மணிக்கு முடிந்தது.

### காரையார் கோவில் கி. கா. சபை

இம்மகா சபையின் வருஷாந்தக் கூட்டம் சபைத் தலைவர் ஸ்ரீ ஆ. மெய்க்கோல் உடையாரவர்கள் தலைமையில் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸ வாசகசாலைக் கட்டிடத்தில் இரவு 8 மணிக்கு நடந்தது. புது வருஷ நிர்வாகஸ்தர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். தலைவர், ஸ்ரீ எஸ். அனந்தராமய்யர்; உபதலைவர், ஸ்ரீ ஆ. மெய்க்கோல் உடையார்; காரியதரிசி, ஸ்ரீ ஆர். வெங்கிடேஸ்வரன்; உதவிக் காரியதரிசி, ஸ்ரீசோம. சிவப்பிரகாசம்; பொக்கிஷதார், ஸ்ரீ கா. காளைப்பெருமாள் நாயுடு.

### ஸ்திரீ முனிஸிபல் கமிஷனர்

வட இந்தியாவிலுள்ள ஸாகிப் கஞ்ச் முனிஸிபாலிடியில் ஸ்ரீமதி பிரதிபா மாலுக் பி.ஏ., பி.டி., கமிஷனராக நியமிக்கப்பட்டிருக்கிறார். இந்தியாவில், முதன் முதல் இப் பதவி வகிக்கும் பெண்மணி இவர்தான்.



## இளைஞர்கட்கு ஆலோசனை

ஸ்ரீ M. சின்னையா செட்டியார் எழுதிய சமூக சீர்திருத்த நூல். 40 அரிய கட்டுரைகள் அடங்கியது. 200 பக்கங்கள் கொண்டது.

விலை ரூபாய் ஒன்று. தபாற் கூலி வேறு

கிடைக்கு மிடங்கள்—

M. சின்னையா செட்டியார்,
மகிபாலன்பட்டி:

குமரன் ஆபீஸ், காரைக்குடி.

### தொழிலாளர் காலனி

மதுரை ஆலைத் தொழிலாளர்களுக்காகத் திருப்பரங்குன்றத்தில் ஏற்படுத்தப்பட விருக்கும் வீடு வசதித் திட்டத்துக்கு ஹார்விபட்டி என்ற பெயருடன் சென்னை தொழில் மந்திரி கனம் வி. வி. கிரி மார்ச் 26ல அஸ்திவாரக்கல் நாட்டினார்.

### காஷ்மீரத்தில் பல தார மணத்தடை

காஷ்மீர அஸம்பிளியில் பல தார மணத்தடை மசோதா ஒன்று கொண்டுவரப் போவதாக ஒரு மெம்பர் அறிவித்திருக்கிறார். ஒரு மனைவியிருக்கும்போது இன்னொரு மனைவியை மணஞ் செய்பவருக்கு மூன்று வருடக் கடுங்காவல் தண்டனையும், 500 ரூபாய் அபராதமும் விதிக்க இம்மசோதா அதிகாரமளிக்கிறது.

### காரைக்குடி சித்த வைத்திய சங்கம்

இச்சங்கத்தின் மகாசபைக் கூட்டம் உபதலைவர் டாக்டர் கே. கோவிந்தராஜுலு தலைமையில் மார்ச் 22ல நடைபெற்றது. சங்கச் சார்பில் சொந்த முறையில் வைத்தியசாலை நிறுவ பொருளாதார நிலை இடங்கொடா தாகையால், விரும்பும் யாதாமொரு அங்கத்தினர் தர்மமாக நடத்துவதென்றும், மகர் நோம்புப் பொட்டலுக்குச் சமீபமுள்ள கிருஷ்ணா டாக்கீசுக்கு அருகில் வைத்தியசாலை நிறுவ வேண்டுமென்றும் அங்கு இடம் கிடைக்காவிட்டால் வேறு இடம் பார்ப்பதென்றும் முடிவு செய்யப்பட்டது. வைத்தியசாலை நிறுவுதற்குரிய நிபந்தனைகளும் தீர்மானிக்கப்பட்டன. 16-3-39ல் வெளியிட்டுள்ள சித்தவைத்திய பிரசார சபையை, காரைக்குடி சுதேச சித்தவைத்திய சங்கத்தின் பிரசாரசபை யென்று மாற்றப்பட்டிருக்கிறது. காரைக்குடி முனிஸிபல் கவுன்ஸிலரும், சித்தவைத்திய சங்கக் கமிட்டி மெம்பருமான அன்பர் ராம. அழகப்பா அவர்கள் மலாய்நாடு சென்றபோது ரயில்வே ஸ்டேஷன்வரைச் சென்று ஆசி கூறி அவருக்கு மாலைபோட்டு வழியனுப்பப்பட்டது என்று காரியதரிசி அறிவிக்கிறார்.





## காரைக்குடியில் கம்பர் விழா

### திரு டி. கே. சிதம்பரநாத முதலியார் தலைமை

### உற்சாகமான ஊர்வலமும் உளங்கனிந்த உரைகளும்

(நமது நிருபர்)

முதல் நாள் — முற்பகல்

பங்குனித் திங்கள் இருபதாம் தேதி (2—4—39) காலை விழாத் தலைவர் திருவாளர் டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்களையும் மற்ற பிரசங்கிகளையும் வரவேற்பதற்காக, கம்பர் விழாக் கமிட்டித் தலைவர் திருவாளர் சொ. முருகப்பா அவர்களும், காரியதரிசி திருவாளர் சா. கணேசன் அவர்களும், மற்றும் பல பிரபலஸ்தர்களும் புகை வண்டி நிலயத்திற்குச் சென்றிருந்தனர். தலைவரும் மற்றவர்களும் மாலை யணிவித்து வரவேற்று திரு. சொ. முரு அவர்கள் இல்லத்திற்கு அழைத்து வரப்பட்டனர்.

மேல மடத்திலிருந்து ஊர்வலம் ஆரம்பமாயிற்று. மாஜி ஹைகோர்ட்டு ஜட்ஜ் திருவாளர் V. V. சீனிவாசய்யங்காரால் தயாரித்து அனுப்பப் பெற்றிருந்த கம்பரின் திருவுருவப் படம் யானை மீது வைக்கப்பட்டிருந்தது. கல்லுக்கட்டி வழியாக ஊர்வலம் வந்தது. வழி நெடுகப் பலர் மாலை யணிவித்தனர்.

முன்னால் யானை. அதன் மீது கம்பர் படம். இரண்டு வரிசையாக சுமார் 300 அடி நிற்கும் 500 மாணவ மாணவிகள். தேசிய கீதம். மாணவர்களின் கரங்களில் "கம்பன் புகழ்பாடிக் கன்னித் தமிழ் வளர்ப்போம்" என்று பொறிக்கப்பட்ட அட்டைகள். கொட்டு முழக்கம். இடையிடையே நிற்கும் சாரணர்கள். இவ்வளவும் சேர்ந்து கண் கொள்ளாக் காட்சியாக ஊர்வலம் சென்றது.

திரு. டி. கே சிதம்பரநாத முதலியார்

ஊர்வலம் சிவன்கோவில் வடக்கு வீதியில் அமைக்கப்பட்டிருந்த அலங்காரக் கொட்டகைக்கு வந்து சேர்ந்தது. கொட்டகை தோரணங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அடியிற்கண்ட, கம்பரால் பாடப்பட்ட வாக்கியங்களடங்கிய வாக்கிய அட்டைகள் கம்பங்கள் தோறும் கட்டப்பட்டிருந்தன:

தமிழ் எனும் அளப்பரும் சலதி தந்தவன்
அன்பினல்லதோர் ஆக்கமுண்டாகுமோ?

மெய்யில்நின்ற பின் வேள்வியும்
[வேண்டுமோ?
இரக்கமென்று ஒரு பொருளிலாத
[நெஞ்சினர் அரக்கர்
துன்புளதுஎனி லன்றே சுகமுளது?
இன்றுளார் நாவை மாய்வார் புகழுக்கோர்
[இறுதியுண்டோ?
மீளரும்தருமந்தன்னை வெல்லுமோ பாவம்?
நகையுடை முகத்தையாகி
இன்னுரை நல்கு.

அஞ்சல் அஞ்சல் என்கிலாத
ஆண்மை என்ன ஆண்மையே?
காதைகள்சோறிவன செவிநுகர் கவிகள்.
ஈய்ந்தவ ரல்லது இருந்தவர் யாரே?
பிழைத்தது பொறுத்தல்
என்றும் பெரியவர் கடனே!
வீரங்காத்தலை வேண்டேன்று
வேண் டுவாய்.

திருவாளர் முரு. வெ. சாமிநாதன் செட்டியார் கம்பனிலிருந்து தோத்திரம் பாடினர்.

### திரு. சொ. முருகப்பா

விழாக் கமிட்டித் தலைவர் திருவாளர் சொ. முருகப்பா அவர்கள் பேசியதாவது:—காரைக்குடியில் கம்பன் விழா வெடுப்பது இதுவே முதன் முறையாகும். அவரின் பிற்கால வாழ்வு இப்பகுதியில் நிகழ்ந்ததென்றும் நாட்டரசன்கோட்டையில் சமாதி யடைந்தாரென்றும் சொல்லப்படுகின்றது. கம்பன் விழாவில் தலைமை வகிக்க திருவாளர் டி.கே. சி—தான் தகுந்தவர் என்று சொல்லவும் வேண்டுமோ? அவர்கள் இங்கு வந்தது நம்முடைய பெரும் பாக்கியமாகும். கம்பன் விழா ஒரு சமயச் சார்பு பற்றியதன்று. ஒரு ஜாதிச் சார்பு பற்றியது மன்று. கம்பன் தமிழன். நாம் தமிழர்-தமிழ் இலக்கிய உலகில் தலை சிறந்தவனுக்கு விழா நடத்துகின்றோம். விழாவினை நடத்தித் தரும்படித் தலைவரை கேட்டுக் கொள்கிறேன்.

### திரு. சா. கணேசன்

திரு. சா. கணேசன் அவர்கள் பேசியது வருமாறு:—

நீங்கள் பல முறை தலைவரவர்களின் உரைகளாகிய இன்பவாரிதியில் நீந்தித் திளைத்திருப்பீர்கள். மறுபடியும் அந்தப் பாக்கியம் கிடைத்திருக்கிறது. தலைவர் நமக்கு நல்ல உரைகளை நல்குவார்கள். அவர்கள் அவைத்தலைமைதாங்கவேண்டும். திரு. முருகப்பா அவர்கள் பிரேரேபித்ததை நான் ஆமோதிக்கிறேன்

தலைவர் தமது அரிய முன்னுரைச் சொற்பொழிவை நிகழ்த்தினார்கள்.

பிற்பகல்

மாலை 5 மணிக்கு மீண்டும் விழா ஆரம்பமாகியது. திரு. சுப. ஆறுமுகம் செட்டியார் கம்பனிலிருந்து தோத்திரம் பாடினர். திருவாளர் எம். எஸ். பூர்ணலிங்கம் பிள்ளை அவர்கள் எம். எ. எல்., டி. சொற்பொழிவாற்றினர். அடுத்தபடியாக அமராவதி புதூர் திருவாளர் சுப. ஆறுமுகம் செட்டியாரவர்கள் கம்பனின் நினைவுபற்றியும் கவி நயம் பற்றியும், ஆங்காங்கே சிற்சில கவிகளை இனிமையாகப் பாடிக்காட்டி விரிவுரை நிகழ்த்தினர். மற்ற நண்பர்களைக் காட்டிலும் பொழுது போக்குவதற்கு கம்பன் உற்ற துணைவன் என்று குறிப்பிட்டார்கள். சென்னை திருவாளர் அருணாசலம் பிள்ளை அவர்கள் கம்பனுடைய கவிகளுக்கிடையிலே பிறருடைய செருகல்கள் சேர்ந்து கம்பனுக்கும் கவிக்கும் நமக்கும் கெட்ட பெயரை உண்டாக்குகிற தென்றும், அப்படிப்பட்ட கவிகளிலுள்ள இடைச்செருகல்களைக் களைந்து தக்க பதங்களைச் சேர்த்து திருவாளர் சிதம்பரநாத முதலியாரவர்கள் சீர்திருத்தம் செய்திருப்பதாயும், அந்த சீர்திருத்தங்கள் தமிழறிஞர்களால் ஒப்புக்கொள்ளப்படவில்லை யென்றாலும் தலைவரின் திருத்தம் மிகச் சரியானதே யென்றும், எல்லாத் திருத்தங்களையும் ஒன்று சேர்த்து புத்தகம் வெளியிடும்படியும் தலைவரைக் கேட்டுக் கொள்வதாகவுங் கூறியமர்ந்தார். பின்னர் மணிக்கொடி ஆசிரியர் திருவாளர் ப. ராமசாமி ஐயங்கார் அவர்கள் "சிறையிருந்த செல்வி" என்ற பொருள்பற்றி சொற்பொழிவாற்றுகையில், தற்காலச் சிறைக்கும் சீதை யிருந்த சிறைக்கும் ஒற்றுமை காட்டி கம்பன் கவியை வாழ்க்கையோடிணைத்து பற்பலகவிகளை எடுத்துக்காட்டி மிக அழகாக சோகத்தின் சிகரத்தை வர்ணித்தார்கள். கம்பனுடைய கவியில் காட்டப்படுகின்ற சீதை—அசோக வனச் சிறை இவைகள் ஒரு படத்திலாவது சரியாகச் சித்தரிக்கப்படவில்லை யென்றும், கம்பனை நன்றாக அறிந்து சிறையிருந்த செல்வியைச் சித்திரம் எழுதினால் அது என்றும் நிலைத்திருக்கும் என்றும் குறிப்பிட்டார்கள்.

சொற்பொழிவாளர்களின் பேச்சுகளில் இருந்த நயத்தையும் நல்லுரைகளையும் பற்றி தலைவர் முடிவுரை கூற முதல்நாள் விழா முடிந்தது. இரவு மணி 9½ க்கு மேலாகியும் மக்கள் அமைதியோடு இன்பம் அனுபவித்துக் கொண்டிருந்ததானது கூட்டத்திற்குப் பெரும் அழகை அளித்ததெனலாம்.

### இரண்டாம் நாள்—முற்பகல்

திருவாளர் ஆறுமுகம் செட்டியார் கடவுள் வாழ்த்தாக கம்பன் கவியொன்றைப் பாடினர். தலைவர் டி. கே. சி. சிறிது நேரம் பேசினர்கள். அதற்கடுத்தபடியாக "கம்பரின் காப்பியப் பண்பு" என்பது பற்றி வித்வான் திருவாளர் பரிமேலழகனார் சொற்பொழிவாற்றினர். அதற்கடுத்தபடியாக மூகவை எம். ராஜமாணிக்கம் பாரதியையும் கம்பனையும் இணைத்துக் காட்டி இப்பொழுது சொல்லிக் கொடுக்கிறபடி பௌதிக சாஸ்திரங்கள் அக்காலத்தில் கம்பனால் எழுதப்பட்டிருக்கின்றனவென்று கூறி சில உதாரணங்களோடு பேசினர்.

### பிற்பகல்

வித்வான் அரு. சோமசுந்தரஞ் செட்டியாரவர்கள் "இராமன் மாட்சியும் ஏந்திழையார் காட்சியும்" என்ற பொருள்பற்றி மிக உணர்ச்சியுடன் இனிமையாகப் பாடிப் பேசினர்கள். தலைவர் முடிவுரை கூறினர்கள். ஆசிச் செய்திகள் படிக்கப்பட்டன. விழாக் கமிட்டிக் காரியதரிசியால் வந்தனம் கூறப்பட்டது. வாழிய செந்தமிழ் பாட விழா இனிது நிறைவெய்தியது.

### த. நா. கா. க. தலைவர் சுற்றுப் பிரயாணம்

விற்பனை வரி விஷயமாகத் தமிழ்நாடுக் காங்கிரஸ் கமிட்டித் தலைவர் ஸ்ரீ ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் சென்ற 4ல சென்னையிலிருந்து புறப்பட்டு திருச்சி சென்று, மன்னார்குடி, நாகபட்டணம், திருவாரூர், சிதம்பரம், கடலூர், வாலாஜா, வேலூர், திருவண்ணாமலை முதலிய விடங்கட்குச் சென்றுவிட்டு 20ல சென்னை சேர்கிறார். 21ல காரைக்குடிக்குப் புறப்பட்டு 22, 23 தேதிகளில் இங்கு தங்கிவிட்டு 24ல சென்னை திரும்புவார்.

குமரன்

காரைக்குடி
வெகுதானிய-ஸு பங்குனி-மீ 24உ

## மகாத்மா வெற்றி

ராஜ்கோட் தகராறில் தீர்ப்பளிக்கும்படி கேட்டுக் கொள்ளப்பட்ட சமஷ்டிக் கோர்ட் பிரதம நீதிபதி ஸர் மாரிஸ் க்வயர் தமது தீர்ப்பை வெளியிட்டு விட்டார். சீர்திருத்த விசாரணைக் கமிட்டி அமைப்பதுபற்றி, ராஜ்கோட் மன்னர் தாகூர் சாஹிபுக்கும், சர்தார் பட்டேலுக்கும் ஏற்பட்ட ஒப்பந்தப்படி ஏழு மெம்பர்களை நியமிக்கும் விஷயத்தில் சர்தாரின் சிபார்சே முடிவானதென்றும், தாகூர் சாஹிப் பட்டேல் சிபார்சை அப்படியே ஒப்புக்கொள்ள வேண்டியது தானென்றும் தீர்ப்புக் கூறப்பட்டிருக்கிறது. இந்தத் தீர்ப்பு மகாத்மாவுக்கு வெற்றியென்பதில் ஐயமில்லை. மகாத்மா அடைந்துள்ள இந்த வெற்றி, சமஸ்தானப் பிரஜைகளத்தனை பேருடையவும் வெற்றி யென்பதும் மிகையாகாது. ராஜ்கோட் மக்கள் மட்டுமின்றி, இந்திய மக்கள் அனைவரும் இந்தத் தீர்ப்பு கேட்டு குதூகலமடைந்துள்ளனர்.

சீர்திருத்த விசாரணைக் கமிட்டியில் மொத்தம் பத்து அங்கத்தினர்கள் இருக்க வேண்டும். இவர்களில் ஏழு பேர்களை சர்தார் பட்டேல் சிபார்சுப்படி தாகூர் சாகிபு நியமிக்க வேண்டுமென்பது சர்தார் பட்டேலின் கட்சி. பட்டேல் சிபார்சு செய்தாலும், அப்படியே ஒப்புக்கொள்ளவேண்டியதில்லையென்றும், கமிட்டி மெம்பர்களைக் கடைசியாகத் தெரிந்தெடுக்கும் உரிமை தாகூர் சாகிபுக்கே உண்டென்றும், அவர் இஷ்டப்படி சர்தாரின் சிபார்சை ஏற்கவோ, நிராகரிக்கவோ செய்யலாமென்றும் தாகூர் விவாதித்தார். ஒப்பந்தம் மிகத் தெளிவாகவே இருக்கிறது. ஒப்பந்தத்தின் வாசகப்படி, சர்தாரின் சிபார்சை தாகூர் சாகிபு ஏற்கவேண்டியதுதான்; நிராகரிக்க இடமில்லை. எனினும், தாகூர் சாகிபு, பிறருடைய தூண்டுதலினாலோ, என்னவோ முரட்டுப் பிடிவாதஞ் செய்தார். மகாத்மா இது கண்டு உபவாசத்தை ஆரம்பித்தார். அதனால், கவர்னர் ஜெனரல் இதில் தலையிட வேண்டியதாயிற்று. அவரது யோசனைப்படி, ஒப்பந்தமும், அது சம்பந்தமான கடிதங்களும் சமஷ்டிக் கோர்ட்டுப் பிரதம நீதிபதிக்கு அனுப்பப்பட்டன. இந்த யோசனையை மகாத்மாவும் சற்றும் தயக்கமின்றி ஏற்றுக்கொண்டார். தமது பக்கமே நியாய மிருக்கிற தென்பதில் காந்திஜிக்குக் கடுகளவு கூட சந்தேகமில்லை. அதனால் தான் அவர் சமஷ்டிக் கோர்ட்டின் தீர்ப்புக்கு விட சம்மதித்தார். இப்பொழுது அவர் பக்கமே வெற்றி யேற்பட்டிருக்கிறது.

"இன்று வெளியிடப்பட்டிருக்கும் சமஸ்தான அறிக்கையின் இரண்டாவது பிரிவில் குறிப்பிட்டுள்ள கமிட்டியின் ஏழு மெம்பர்களை சர்தார் வல்லபாய் படேல் சிபார்சு செய்வார்; அவர்களை நாங்கள் நியமனம் செய்வோம்"-என்று தாகூர் சாகிப் கையொப்பத்துடன் வெளியான அறிக்கை யொன்றே இந்தத் தீர்ப்புக்கு முக்கிய ஆதாரமாகவுள்ளது. எவ்விதச் சந்தேகத்துக்கும் இடமின்றி, இந்த அறிக்கை அவ்வளவு தெளிவாக இருக்கிறது. இருந்தும், தாகூர் சாஹிபு பிடிவாதங் காட்டினர். அதன் பயனாக, தமது தள்ளாத வயதில் மகாத்மா காந்தி, திடீரென உபவாசத்தை ஆரம்பிக்க நேர்ந்தது; இவ்வருஷக் காங்கிரஸுக்கும் அவர் செல்லமுடியாது போயிற்று; காங்கிரஸுக்குச் சென்ற லட்சக் கணக்கான மக்கள் அவர் தரிசனங் கிடைக்காமல் ஏமாந்து, வருத்தத்துடன் திரும்பினர். எனினும், மகாத்மா மனங் குளிரும்படியும், இந்திய மக்கள் அனைவரும் மட்டற்ற மகிழ்ச்சியடையும்படியும் சமஷ்டிக்கோர்ட் தீர்ப்பு வெளிவந்திருக்கிறது.

மகாத்மாவின் உண்ணாவிரதம் ராஜ்கோட் மன்னருக்கு மட்டுமல்ல, இந்தியாவிலுள்ள சமஸ்தானாதிபதிகள் அத்தனை பேருக்கும் ஒரு சிறந்த பாடத்தைக் கற்பித்து விட்டது என்று சொல்லலாம். அவர்கள் இனித் தம் மிஷ்டம் போல் வாக்குறுதிகளை மீறவோ, அல்லது தம் பிரஜைகளின் நியாயமான உரிமைகளை அலக்ஷியஞ் செய்யவோ முடியாதென்பதை இதிலிருந்து உணர்ந்து கொள்வது சிலாக்கியமாகும். தமது தீர்ப்பில்நீதிபதி கடைசியாகக் குறிப்பிட்டிருப்பதை அவர்கள் நன்கு கவனிக்க வேண்டுகிறோம். "தனிப்பட்ட நபர்கள் அல்லது கட்சிகளின் உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்வது முக்கியமானதுதான்; ஆனால் ராஜகோட் பிரஜைகளின் உரிமைகளைப் பாதுகாப்பது முக்கியத்தில், முந்தினதற்குச் சிறிதும் குறைந்ததில்லை" யென்று அவர் கூறியிருப்பது ஆழ்ந்த கருத்துடையதாகும். சமஸ்தான மன்னர்கள் அத்தனைபேரும், இந்த உயரிய கருத்தைத் தம் மனத்திலிருத்தி, பிரஜைகளின் க்ஷேமலாபங்களைக் கவனித்து வருவார்களானல் சமஸ்தான மக்களுக்கு மட்டுமல்ல, தங்களுக்கும் நன்மையைச் செய்தவர்களாவார்கள்.

---

### இப்பொழுது பார்க் வேண்டாம்
#### தேவகோட்டை கா. க. தீர்மானம்.

(நமது நிருபர்)

தேவகோட்டை நகர காங்கிரஸ் கமிட்டிக் கூட்டமொன்று நேற்று புதன்கிழமை உபதலைவர் ஸ்ரீ சொக்கலிங்கம் பிள்ளை அவர்கள் தலைமையில் நடைபெற்றது. ஸ்ரீ ஆர். சங்கரன் பிள்ளை அவர்கள் தமது தலைவர் பதவியை ராஜிநாமாச் செய்து விட்டதால் அட்வகேட் யம். ஆர். கிருஷ்ணசாமி அய்யங்காரவர்கள் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். காலியாயிருந்த இரண்டு அங்கத்தினர் ஸ்தானங்கட்கும் ஸ்ரீமான்கள் எஸ். கணேசனும் தேவ. நடராஜன் செட்டியாரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். பின்னர் புதிய தலைவர் தலைமையில் கமிட்டிக் கூட்டம் நடைபெற்றது.

ஊருக்கு வெளியே முனிசிபல் பார்க் ஏற்படுத்த முனிசிபாலிட்டியார் தீர்மானித்திருப்பது இப்பொழுது தேவையில்லை யென்றும், ஜனங்களுக்கு நீர் வசதியும், ரோட்டு வசதியும் இல்லாமல் கஷ்டப்படும்போது இப்பொழுது ஊருக்கு வெளியே வெகுதூரத்தில் பார்க் அமைப்பது அனாவசியமென்றும், ஆகவே இவ்விஷயத்தைப் புனராலோசனை செய்யும்படி முனிசிபல் பிரசிடெண்டு அவர்களைக் கேட்டுக்கொள்வதாகவும், மந்திரி கனம் ராஜன் அவர்கள் இந்நகருக்கு விஜயஞ் செய்யும் போது, ஒரு பொதுக்கூட்டம் நடத்தி அதில் விற்பனை வரியைப்பற்றிப் பேசும்படி அவர்களைக் கேட்டுக் கொள்ள வேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

---

யுத்தமோ அல்லது அவசர நிலைமையோ ஏற்படுமானல் அப்பொழுது இந்நாட்டிலுள்ள ராணுவப் படையைத் திரட்டவேண்டியது அவசியமேற்படுமென ஏப்ரல் 4உ இந்திய சட்டசபையில் ஸ்ரீமான் சத்தியமூர்த்தியின் கேள்விக்கு ராணுவக் காரியதரிசி பதில் தந்தார்.

## நாட்டரசன்கோட்டையில் கம்பர் விழா

(நமது நிருபர்)

நாட்டரசன் கோட்டையில் கம்பர் சமாதியிருக்கும் இடத்தில் ஷை யூர் வாசியான காலஞ்சென்ற திருவாளர் ஆவி. அருணாசலம் செட்டியாரவர்கள் சுமார் முப்பத்தையாயிர ரூபாய் செலவழித்து மண்டபங்கட்டி பல மரங்கள் வளர்த்து திருப்பணி ஆற்றியுள்ளார்கள். ஷையாரின் குமாரரும் நாட்டரசன்கோட்டை பஞ்சாயத்து போர்டு சேர்மனுமான திருவாளர் ஆவி. அரு. கம்பர் ராமநாதன் செட்டியாரவர்கள் கம்பர்கோயிலில் கம்பர் விழாக் கொண்டாட ஏற்பாடுசெய்திருந்தார்கள். காரைக்குடியில் நடைபெற்ற கம்பர் விழாவுக்கு விஜயம் செய்திருந்தவர்கள் ஏப்ரல் 4உ காலை நாட்டரசன்கோட்டை வந்தனர். ரயில்வே ஸ்டேஷனுக்கு திருவாளர்களான ஆவி. அரு கம்பர் ராமநாதன் செட்டியார், பாரதிவாசகசாலைக் காரியதரிசி சொக்கலிங்கம் செட்டியார், வெ. கண. வெ. வெள்ளையப்ப செட்டியார் ஆகியோர் வந்திருந்து தலைவர் திருவாளர் சிதம்பரநாத முதலியாரவர்களையும் மற்றவர்களையும் வரவேற்றனர். இவ்விழாவுக்கு காரைக்குடியிலிருந்து திருவாளர்களான சொ. முருகப்பா, ராய. சொக்கலிங்கன், அ. லெ. நடராஜன், பனை. மெ. மெ. பழ. வெங்கடாசலம் செட்டியார், சா. கணேசன், மெய. ஆ. முத்துக்கருப்பன்செட்டியார், பெரி. மெ. காசிச் செட்டியார், ப. நீலகண்டன், சென்னை ப. ராமசாமி ஐயங்கார், ஆராவயல் ராம. நாகப்பா, கொத்தமங்கலம் லெ. நடேசன், வாலாஜாபாத் மாசிலாமணி முதலியார், பாகனேரி கண. மு. மு. சாத்தப்ப செட்டியார் ஆகியோர் விஜயம் செய்திருந்தனர்.

கம்பர் ராமநாதன் செட்டியாரவர்கள் இல்லத்தில் அனைவருக்கும் காலை சிற்றுண்டி அளிக்கப்பட்டது. தலைவரையும் வெளியூரிலிருந்து விஜயம் செய்திருந்தவர்களையும் உள்ளூர் அன்பர்கள் அழைத்துச்சென்று பாரதிவாசகசாலை, புதிதாகக் கட்டப்பட்ட கண்ணாத்தாள் கோயில் மண்டபம், பெண் பாடசாலை ஆகியவைகளைக் காட்டி அழைத்து வந்தனர்.

பகல் உணவுக்குப் பிறகு கம்பர் ராமநாதன் செட்டியார் அவர்கள் இல்லத்திலிருந்து கம்பர் படம் காரில் வைக்கப்பட்டு ஊர்வலம் மேளதாளங்களுடன் புறப்பட்டு,கம்பர்கோயிலை அடைந்தது. மாணவ மாணவிகளும் பல பெண்மணிகளும் விழாவுக்கு வந்திருந்தது குறிப்பிடத்தக்கது. ஆண்களும் பெண்களுமாக 300பேர் இருக்கலாம். மாணவிகள் பாரதி பாட்டுப் பாடினர். லெக்ஷ்மணன் செட்டியார் கம்பர் தோத்திரம் பாடினர். திரு. சா. கணேசன் தலைவரைக் குறித்து சிறிது பேசினர். திருவாளர் டி. கே. சிதம்பரநாத முதலியாரவர்கள் தலைமைவகித்து முன்னுரை கூறினர்கள். காரைக்குடி 'குமரன்' ஆசிரியர் திருவாளர் சொ. முருகப்பா அவர்களும், சென்னை மணிக் கொடி ஆசிரியர் திருவாளர் ப. ராமசாமி ஐயங்கார் அவர்களும் கம்பனைப்பற்றியும், கவியைப்பற்றியும் சொற்பொழிவாற்றினர்கள்.

நாட்டரசன்கோட்டை P. வீரபத்ர பாண்டியன் கம்பர் ராமநாதன் செட்டியார் மீது பாடியிருந்த விருத்தப் பாக்களைப் பாடினர். தலைவர் முடிவுரை கூறினர். திரு. சோம. லெக்ஷ்மணன் செட்டியாரவர்களால் வந்தனம் கூறப்பட்டு விழா இரவு 8½ மணிக்கு இனிது நிறைவெய்தியது. பகலும் இரவும் கம்பர் ராமநாதன் செட்டியாரவர்கள் இல்லத்தில் உள்ளூர் வெளியூர் அன்பர்களுக்குச் சிறந்த விருந்து அளிக்கப்பட்டது.

## மந்திரி கனம் ராஜன் விஜயம்

சுகாதார மந்திரி கனம் டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன் அவர்கள் ஏப்ரல் 14உ காரைக்குடிக்கும், தேவகோட்டைக்கும் விஜயஞ் செய்கிறார்கள். அன்று பகல் தேவகோட்டையிலும், பிற்பகல் காரைக்குடியிலும்

மந்திரி கனம் டி. எஸ். எஸ். ராஜன்

நடைபெறும் நிகழ்ச்சிகளின் விவரம் வருமாறு:

### தேவகோட்டை

காலை 8 மணி ராமநகரில் சிசு சம்ரட்சணை ஸ்தாபனத்தைத் திறந்து வைத்தல்.

9 மணி முனிசிபல் பார்க்குக்கு அஸ்திவாரக் கல் நாட்டுதல். நகர சபையார் உபசாரப் பத்திரம் படித்துக்கொடுத்தல்.

10 மணி காந்தி ஆசிரமத்தைப் பார்வையிடுதல்.

பிற்பகல் 2-30—3-15 சப் கலக்டர் பங்களாவில் பேட்டியளித்தல்.

3—30 ஜமீன்தார் பங்களாவில் தேனீர் அருந்துதல்.

### காரைக்குடி

4 மணி கல்லுக்கட்டியில் மணிக் கூண்டுக்கு அஸ்திவாரக் கல் நாட்டுதல்.

5 சுகாதார சிசு வாரக்கொண்டாட்டத்தை ஆரம்பித்து வைத்தல்.

---

### பம்பாயில் விற்பனை வரி

மோட்டார் எண்ணெய்களின் விற்பனை,பம்பாயில் தயாரிக்கப்படும் துணி, இறக்குமதி செய்யப்படும் துணி, பட்டுநூல் அதைக்கொண்டு தயாரிக்கப்படும் துணி, செயற்கைப்பட்டு நூல், அதுகொண்டு தயாரிக்கப்படும் துணி இவற்றின் விற்பனை மீது வரி விதிக்க உத்தேசிக்கப்பட்டிருக்கும் பம்பாய் விற்பனை வரி மசோதா பம்பாய் பிரதிநிதி சபையில் சட்டமாக நிறைவேறிவிட்டது.

---

குறிப்பு.—கம்பர் சமாதி அடைந்திருக்கும் இடத்தில் லிங்கம் வைத்து தினமும் பூஜை நடந்து வருகிறது. அவ்வூர் வாசிகள் 'கம்பர் கோயில்' என்று அழைக்கிறார்கள். அவ்வூரில் குழந்தை பிறந்ததும் கம்பர் கோயிலிலிருந்து மண் எடுத்து கரைத்துக் கொடுக்கிறார்கள்.

### கொத்தமங்கலத்தில் விழா

நாட்டரசன் கோட்டையிலிருந்து திருவாளர்களான சிதம்பரநாத முதலியார், சொ. முருகப்பா, சா. கணேசன் முதலியோர் 5உ பகல் 10 மணி வண்டியில் காரைக்குடி வந்து பிற்பகல் கொத்தமங்கலம் விழாவுக்குச் சென்றனர்.



## மகாத்மா வெற்றி.

### ராஜ்கோர்ட் பிரச்னையில் சர் க்வயர் தீர்ப்பு.

ராஜ்கோட் தகாறில், சமஷ்டிக் கோர்ட் பிரதம நீதிபதி ஸர் மாரிஸ் க்வயர் தமது தீர்ப்பை ஏப்ரல் 3உ வெளியிட்டு விட்டார். உத்தேசிக்கப்பட்டுள்ள சீர்திருத்தக் கமிட்டியின் பத்து மெம்பர்களில் ஏழு பேர்களை நியமிக்

மகாத்மா காந்தி

கும் விஷயத்தில் தாகூர் சாஹிபின் முடிவுக்கு இடமில்லை யென்றும், சர்தார் படேல் சொல்லுவதையே ஒப்புக்கொள்ள வேண்டுமென்றும் அவர் தமது தீர்ப்பில் குறிப்பிட்டிருக்கிறார்.

தீர்ப்பைக் கேட்டதும் மகாத்மா மிகுந்த மன நிம்மதி யடைந்தார்.

---

### மகாத்மா—வைஸ்ராய் சந்திப்பு

ஏப்ரல் 4உ பிற்பகல் மகாத்மா காந்தி வைஸ்ராயைப் பேட்டிகண்டு பேசினர். சுமார் ஒன்றரைமணி நேரம் இருவருக்கும் சம்பாஷணை நடந்தது.

---

### வருஷப்பிறப்பு திருவிழா

பிரமாதி சித்திரை முதல் தேதி வெள்ளிக்கிழமை காரைக்குடி இந்து வர்த்தக சங்கத்தாரால் வழக்கம்போல் ஸ்ரீ கொப்புடைய நாயகி அம்பாளுக்கு அபிஷேக அலங்காரங்களுடன் அன்றிரவு வெள்ளிக் குதிரை வாகன மண்டகப்படியும் நடத்தப்படும். திருவெண்காடு சுப்பிரமணிய பிள்ளை, பந்தநல்லூர் ரத்தினம் பிள்ளை, இவர்களின் நாதஸ்வரமும், நீடாமங்கலம் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை ஸ்பெஷல் தவுலும், கொண்ட மேளக்கச்சேரியும், சென்னை திருப்புகழ் அமிர்தம் கிருபானந்தவாரியார் தேவார திருப்புகழ் கோஷ்டியும் வாண வேடிக்கைகளும் நடைபெறும்.

---

### காரைக்குடியில் கொலை

(நமது நிருபர்)

செக்காலையில் 2-4-39 அன்று இரவு ஊமையான வள்ளியம்மைஆச்சி என்பவள் தன் 5 வயதுள்ள குமாரனுடன் வீட்டில் படுத்துக்கொண்டிருக்கையில் யாரோவந்து அவளைக்குத்திக் கொலைசெய்துவிட்டனர். பையனுக்கு ஆபத்து இல்லை. குத்துப்பட்டவளின் நகைகள் ஒரு ஓலைப்பெட்டியில் கழட்டிவைத்திருந்தபடியே இருந்தனவாம். சாமான்கள் அங்குமிங்கும் சிதறிக்கிடந்தனவாம்.

அவள் 2 மாதத்திற்குமுன் தன் மூத்தபிள்ளையை சுவீகாரம் செய்து கொடுத்து கொஞ்சம் பணம் பெற்றதாகவும், இதையறிந்த யாரோ அந்தப்பணத்தை திருடிக்கொள்ளும் நோக்கத்துடனேயே கொலைசெய்திருக்கவேண்டுமென்றும் யூகிக்கப்படுகிறது. ஆச்சி பணத்தை பாங்கியில் போட்டிருந்தாளாம். போலீசார் புலன் விசாரித்து வருகின்றனர்.

## ராஷ்டிரபதிக்கு காந்திஜி கடிதம்

மகாத்மா காந்தி ஸ்ரீ சுபாஷ் சந்திர போஸுக்கு ஒரு நீண்ட கடிதம் அனுப்பியிருப்பதாகக் கூறப்படுகிறது. ராஷ்டிரபதி கடைசியாக விடுத்த அறிக்கைக்குப் பிறகு, திரிபுரித் தீர்மானத்தை விளக்க வேண்டிய அவசியமில்லையென்று காந்திஜி குறிப்பிட்டிருக்கிறாராம். சட்டவிரோதமாகச் செய்யப்பட்ட தீர்மானம் என ராஷ்டிரபதி தமது அறிக்கையில் குறிப்பிட்டிருந்தார். எனவே, ராஷ்டிரபதி தமதிஷ்டம்போல் காரியக் கமிட்டியை அமைத்துக்கொள்ளலாமென்றும், பண்டித பந்தின் தீர்மானம், மறைமுகமாகத் தலைவர் மீது நம்பிக்கை யில்லையென்பதையே குறிப்பிடுகிறதென்றும் மகாத்மா தெரிவித்திருக்கிறாராம்.

---

### ஹரிஜனங்களைத் தடுத்ததாக

வன்னிக்குடியிலுள்ள லோகல்பண்ட் கிணற்றில் தண்ணீர் எடுக்க வொட்டாமல் ஹரிஜனங்களைத் தடுத்ததாகச் சொல்லப்படும் சில சாதி இந்துக்கள் மீது கிரிமினல் வழக்குத் தொடரும்படி, ராமநாதபுரம் ஜில்லா போர்டு உப தலைவர் ஸ்ரீ எஸ். ஒ. எஸ். பி. உடையப்பா ஜில்லா போர்டு எஞ்ஜினீயருக்கு அதிகார மளித்திருப்பதாகத் தெரிகிறது. தேவகோட்டை ஹரிஜன சேவக சங்கத்தார் இது சம்பந்தமாக ரிவனியு அதிகாரிகளுக்குத் தெரிவித்ததில், ஷை கிணறு ஒரு தனிப்பட்டவருடைய இடத்தில் வெட்டப்பட்டிருப்பதாயும், இடத்தின் சொந்தக்காரர் ஆட்சேபிப்பதாயும் பதில் அறிவிக்கப்பட்டதாம். சங்கக் காரியதரிசி ஸ்ரீமதி கமலா சிவசுப்பிரமணியம் ஜில்லா போடுக்குத் தெரிவிக்க, ஷை கிணறும் அது வெட்டப்பட்டிருக்கிற இடமும் போர்டின் பூரண அதிகாரத்துக்கு உட்பட்டதென்று தெரிய வந்ததாம்.

---

### பீஹாரில் மதுவிலக்கு

1939-ம் வருஷம் ஏப்ரல் முதல் தேதியிலிருந்து பீஹார் சர்க்கார் மாகாணத்தின் பல்வேறு பிரதேசங்களிலும் மதுவிலக்கை அனுஷ்டானத்துக்குக் கொண்டுவருவர், பாட்னா. ஷாஹாபாத் ஜில்லாவை அடுத்த கங்கைக் கரைப் பிரதேசத்திலும், கோக்ராவிலும் முஸாபர்பூர் ஜில்லாவில் ஹாஜிப்பூர் சப் டிவிஷனிலும் ராஞ்சி ஜில்லாவில் பல இடங்களிலும் மன்பூம் ஜில்லாவிலும் மதுவிலக்கு அமுலுக்கு வரும்.

---

### சீனர்கள் எதிர்ப்பு

பல முனைகளிலும் சீனத்துருப்புகள் பலமாக ஜப்பானியரைத் தாக்க ஆரம்பித்திருக்கின்றன. ஹாங்சோ என்ற முக்கிய நகரை முற்றுகைபோட ஒரு லட்சம் சீனர்கள் நகரை நோக்கிச் செல்கின்றன. மங்கோலியாவைத் தாக்க 2 லட்சம் சீனர்கள் சேகரித்து வைக்கப்பட்டிருக்கின்றனர்.

---

### தமிழ்நாடு காரியக் கமிட்டி
#### காரைக்குடியில் கூடும்

சென்னை, மார்ச் 31.—

த.நா.கா. கமிட்டித் தலைவர் ஸ்ரீமான் ஓமந்தூர் பி. ராமஸ்வாமி ரெட்டியார் பின்வருமாறு எழுதுகிறார்:—

ஏப்ரல் மாதம் 22-ந் தேதியன்று காலை 9-மணிக்குக் காரைக்குடியில் தமிழ்நாடு காங்கிரஸ் காரியக்கமிட்டிக் கூட்டம் நடைபெறும். 23-ந் தேதியன்று மாகாணக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டமும் அங்கு நடைபெறும். அப்பொழுது 1938-ம் வருஷம் டிசம்பர் 31-ந் தேதியுடன் முடிவடைந்த வருஷக் கணக்குகளும் 1939-ம் வருஷத்திய வரவு செலவுத் திட்டமும் நிறைவேற்றப்படும். தமிழ் நாட்டின் வருங்கால காங்கிரஸ் வேலைபற்றியும் கமிட்டி அப்பொழுது விவாதிக்கும்.

## அயல்நாட்டு அரசியல்

### ஸ்பெயின் போர்

மாட்ரிட் வீழ்ச்சியுடன் ஸ்பெயின் போர் முற்றுப்பெற்றுவிட்டது. குடியரசுக் கட்சியின் வசமிருந்த முக்கிய நகரங்களெல்லாம் ஜெனரல் பிராங்கோவின் வசமாகி விட்டன. ஜர்மனியும், இத்தாலியும் வெற்றியடைந்த ஜெனரல் பிராங்கோவைப் பாராட்டின.

### சேம்பர்லேன் அறிக்கை

சர்வதேச நிலைமைபற்றி மிஸ்டர் சேம்பர்லேன் மார்ச் 31உ காமன்ஸ் சபையில் ஒரு முக்கியமான அறிக்கையை வெளியிட்டார் போலந்து மீது அந்நியர் படையெடுக்க விரும்புவதாக வதந்திகள் உலாவுவதாயும், அப்படியொரு நிலைமை உண்மையிலேயே ஏற்பட்டால், பிரிட்டிஷ் சர்க்கார் போலந்துக்குத் தங்களாலான வரையில் உதவியளிப்பதாக வாக்குறுதி யளித்திருப்பதாயும், பிரஞ்சு சர்க்காரும் இவ்விதமே வாக்களித்திருப்பதாயும் அறிவித்தார்.

### ஹிட்லர் சீற்றம்

சேம்பர்லேன் அறிக்கைக்கு ஹிட்லர் ஒரு யுத்தக் கப்பலின் நாமகரண விழாவில் பதிலளித்திருக்கிறார். "எந்த நாடாவது தன் சக்தி பெரிதா, ஜர்மனியின் சக்தி பெரிதா என்று சோதித்தறிய விரும்பினல் அதற்குஜர்மன் மக்கள் எப்பொழுதும் தயாராயிருக்கிறார்கள். பிரிட்டன் முன்னூறு வருஷகாலமாக அயோக்கியத்தனமாக நடந்து கொண்டு வந்திருக்கிறது. இப்பொழுது தனது கிழப்பருவத்தில் யோக்கியத் தன்மையைப்பற்றிப் பேசுகிறது" என்று அவர் குறிப்பிட்டார்.

### முஸோலினி முறுக்கு

இச்சந்தர்ப்பத்தில் ஸினர் முஸோலினியும் தம் வாய் வீச்சைக் காட்டி விட்டார். "எங்களுக்குப் போதுமான இடம் இல்லையாயின் யாராவதொருவர் கொடுத்தேயாக வேண்டும். அச்சடிக்கப்பட்ட காகிதத்தையோ அல்லது மையால் எழுதியதையோ காட்டி எங்களைத் தடுக்க முடியாது"—என்று அவர் ஒரு கூட்டத்தில் பேசினர்.

### பிரிட்டனின் உறுதி

ஏப்ரல் 3உ காமன்ஸ் சபையில் அந்நிய நாட்டு விவகாரங்களைக் குறித்து விவாதம் நடைபெற்றது. அவ்வமயம், தாம் 31உ வெளியிட்டுள்ள அறிக்கையை மிஸ்டர் சேம்பர்லேன் மீண்டும் வற்புறுத்தினர். அதே தோரணையில் பிரபுக்கள் சபையிலும் லார்டு ஹாலிபாக்ஸ் ஒரு அறிக்கை வெளியிட்டார்.

### காஸி மன்னர் மரணம்

இராக் மன்னர் ஒரு மோட்டார் விபத்தில் மரணமடைந்து விட்டார். அவருக்கு வயது 27 தான். அவருடைய குமாரனுக்கு 4 வயதுதானகிறது.

### அல்பேனியாவுக்கு ஆபத்து

இத்தாலியத் துருப்புகள் அல்பேனியா நோக்கிப்புறப்பட ஆயத்தமா யிருப்பதாக ரோம் செய்தி அறிவிக்கிறது.

### துருக்கித் தலைவர்

ஜெனரல் இஸ்மத் இனினு துருக்கி குடியரசுத் தலைவராக மீண்டும் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். நான்கு வருஷ காலம் அவர் இப்பதவி வகிப்பார்.

---

### வைத்தியசாலைத் திறப்பு விழா

தேவகோட்டை ரோட்டிலுள்ள முனிசிபல் ஹரிஜன் காலனியில், T. K. V. சாமி அவர்களால் நடத்தப்பெறும் இலவச சித்த ஆயுர்வேத வைத்தியசாலை, சென்ற செவ்வாய்க்கிழமை காலை 9 மணிக்கு. காரைக்குடி பொதுநலச் சங்கத் தலைவர் திரு சி. மு. அரு. நாராயணன் செட்டியார் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. பல அன்பர்கள் வைத்தியசாலையின் அவசியத்தை விளக்கிப் பேசினர்கள்.

---

### ராஷ்டிரபதி உடல் நிலை

ஜாரியா, ஏப் 4—

நேற்றுமாலை 98-8 டிகிரியாக விருந்த சுபாஷ் பாபுவின் ஜுரம் இன்று காலை 98.4 டிகிரிக்கு குறைந்துவிட்டது. அவர் திருப்திகரமாகக் குணமடைந்து வருகிறார்.

## தந்திச் செய்தி

### ரெங்கூன் மார்க்கெட்

ஏப்ரல் 5-உ

| | |
|---|---|
| ரயில் நெல் | 89/90 |
| படகு " | 92/93 |
| சுகந்தி அரிசி வெள்ளை | 240/245 |
| யாதலே " | 245/247-8 |
| புரோம் மில்சார் | 237-8/240 |
| மாந்தலே மில்சார் | 225/235 |
| புழுங்கல் | 247-8/250 |

---

### சென்னை மார்க்கெட்

சென்னை, ஏப்ரல் 4உ

| | | | |
|---|---|---|---|
| சவரன் விலை (மொத்த விலை) | 23 | 12 | 3 |
| சவரன் (சில்லரையில்) | 23 | 12 | 9 |
| தங்கம் ரெடி | 36 | 15 | 0 |
| ஷை வாயிதா | 37 | 0 | 6 |
| மூசை | 36 | 8 | 0 |
| வெள்ளி வாய்தா | 52 | 9 | 0 |
| வெள்ளி ரெடி | 53 | 12 | 0 |
| வெள்ளி (சில்லரையில்) ரூபாய் எடை | 0 | 8 | 9 |

---

### கொழும்பு ரப்பர்

கொழும்பு ஏப்.ல் 3உ

| | | |
|---|---|---|
| கிரேப் ரப்பர் | 45¼ | சதம் |
| ஷை ஷீட் | 40¼ | " |
| ஷை கூப்பன் | 33½ | " |
| டி கூப்பன் | 43 | " |

### கொப்பரா

முதல் தரம் ரூ. 27.75

---

### லண்டன் ரப்பர்

லண்டன் ஏப்ரல் 3உ

ரப்பர் ராத்தல் ஒன்றுக்கு
எட்டே வீசம் பென்ஸ்

---

### சிங்கப்பூர் ரப்பர்

சிங்கப்பூர், ஏப்ரல் 3உ

ரப்பர் பீக்கல் ஒன்றுக்கு
36 வெள்ளி 67 காசு

---

### காரைக்குடி பழய மாணவர் சங்கம்

காரைக்குடி ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேஸ்வரர் வித்தியாசாலைப் பழய மாணவர் சங்கத்தின் 11-வது ஆண்டுவிழாவும், வித்தியாசாலையின் வெள்ளி விழாவும் ஏப்ரல் 9, 10 தேதிகளில் தேவகோட்டை அட்வகேட் ஸ்ரீ ஏ. ரங்கசாமி அய்யங்கார் B. A., B. L., M. L. C. அவர்கள் தலைமையில் நடைபெறும். 9உ ஞாயிற்றுக்கிழமை இரவு 9-30 மணிக்கு ஷை சங்கத்தைச் சேர்ந்த மனோரஞ்சினி சபையார் "லீலாவதி சுலோசன" என்ற நாடகத்தை ஷண்முகவிலாசம் தியேட்டரில் நடிப்பார்கள். 10உ திங்களன்று மாலை திருவாசக மடத்திலிருந்து கல்லுக்கட்டி வழியாக வித்தியாசாலைவரை ஊர்வலம் நடைபெறும். மாலை 5-30 மணிக்கு மாணவர் மகாநாடும் 6 மணிக்கு பொதுக்கூட்டமும் நடைபெறும்.

---

### சிவகங்கை தாலுகா காங்கிரஸ் தேர்தல்

சிவகங்கைப் பிர்க்காவிலிருந்து ஷை தாலூக் கமிட்டிக்குத் தேர்ந்தெடுக்க வேண்டிய இரண்டு ஸ்தானங்களுக்கு 9—4—39 ஞாயிற்றுக்கிழமை மாலை 4 மணிக்கு சக்கந்தியிலும் பெரிய கோட்டையிலும் பாலட் முறையில் தேர்தல் நடைபெறும். சிவகங்கைத் தாலூகாக் கமிட்டி நிர்வாகஸ்தர்கள் தேர்தலும் ஷை கமிட்டியிலிருந்து தேர்ந்தெடுக்க வேண்டிய ஜில்லாக் கமிட்டி அங்கத்தினர்கள் தேர்தலும் 16—4—39 ஞாயிற்றுக்கிழமை மாலை 4 மணிக்கு சிவகங்கையில் காரைக்குடி ஜில்லா காங்கிரஸ் கமிட்டி ஆபீஸில் நடைபெறும் என்று சிவகங்கைத் தாலூகா தேர்தல் அதிகாரி ஸ்ரீ ஆர். ராமானுஜம் அறிவிக்கிறார்.

## பர்மா அரிசி இறக்குமதி

சென்னை மாகாணத்தில் இறக்குமதியான பர்மா அரிசியின் அளவு அடியில் வருமாறு என்று அஸம்பிளியில் கேட்கப்பட்ட கேள்விக்குப் பதிலளிக்கப்பட்டது.

| 1938 | டன் |
|---|---|
| செப்டம்பர் | 18,177 |
| அக்டோபர் | 12,259 |
| நவம்பர் | 23,696 |
| டிசம்பர் | 25,022 |
| 1939 | |
| ஜனவரி | 34,705 |
| பிப்ரவரி | 42,565 |

### ஸ்திரீ நிருபர்

பீஹார் சட்ட சபை நடவடிக்கைகளை ஹிந்தியில் ரிப்போர்ட் செய்ய, குமாரி சாரளா தேவி அம்மாகாண கவர்ன்மெண்டார் நிருபராக நியமித்திருக்கின்றனர். இந்த உத்யோகம் வகிக்கும் முதல் இந்திய ஸ்திரீ இவர்தான்.

### சித்தவைத்திய சங்கப் பிரசாரம்

மார்ச் 31உ முதல் ஏப்ரல் 4உவரை காலு நாட்டிளிலூர், குன்றக்குடியில், காரைக்குடி சுதேச சித்தவைத்திய சங்கத்தினுதவில் கூட்டங்கள் நடந்தன. பல அன்பர்கள் சித்தவைத்தியத்தைப்பற்றிப் பேசினார்கள்.

### சைவப் பஞ்சாங்கம்

திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் வெளியிட்டிருக்கும் பிரமாதி வருட வாக்கிய சைவப்பஞ்சாங்கத்தின் பிரதியொன்று வரப்பெற்றோம். சென்னை மாகாணத் தமிழ்ச்சங்க அமைச்சரும், கடையநல்லூர் போர்டு ஹைஸ்கூல் தலைமைத் தமிழாசிரியருமான சோதிட வித்வான் திரு. இ. மு. சுப்பிரமணிய பிள்ளை அவர்களால் ஆகம முறைப்படி கணிக்கப்பட்டது. இதில் மாதப்பஞ்சாங்க விவரத்துடன் பஞ்சாங்க விளக்கம், மழை, முகூர்த்தம் பார்த்தல், திருமணப் பொருத்தங்கள், ஐம்புள் நூல், சுமார்த்த, வைணவ, கிறித்தவ, மகம்மதிய விசேடங்களும் அடங்கியுள்ளன. சாதாரண மக்களுக்கும் சோதிடர்க்கும் உபயோகப்படும் முறையில் தெளிவாகத் தொகுக்கப்பட்டிருக்கிறது. விலை: கிளேஸ் காகிதத்தில் அச்சிட்டது அணா 2; ரப் காகிதத்தில் அச்சிட்டது அணா 1½: சிறியது அணா 1: வேண்டுவோர், திருநெல்வேலியிலிருக்கும் கழகத் தலைமை நிலையத்திற்கு எழுதிப்பெற்றுக் கொள்ளலாம்.

## விளம்பரம்.

பள்ளத்தூருக்கு அடுத்த மணச்சை கிராமத்திலிருக்கும் பி.மு.சோ. பெரிய கருப்பன் சேர்வை இதன் மூலம் சகலருக்கும் தெரிவிப்பது என்னவென்றால் என்னுடைய தகப்பனார் சோலையனார் பலத்துக்கு 75 வயதுக்கு மேல் ஆகிறது. அவர் சிலகாலமாக புத்தி சுவாதீன மில்லாமல் இருந்துவருகிறார். ஷ்டியாரிடமிருந்து யாராவது தெஸ்த வேஸ்கள், பராதீனங்கள் பெற்றால் அவைகள் சட்டப்படி செல்லாதென்றும் என்னைக் கட்டுப்படுத்தாதென்றும் இதன்மூலம் அறிவிக்கப்படுகிறது.

சோ. பெரியகருப்பன் சேர்வை,
மணச்சை.
3—4—39.

## திருப்பத்தூர்

### காங்கிரஸ் கமிட்டித் தேர்தல்

காரைக்குடி ஜில்லா, திருப்பத்தூர் தாலுகா காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர்களின் தேர்தல் ஏப்ரல் 6-ந்தேதியும் 8-ந்தேதியும் நடைபெறும். குன்னக்குடி பிர்க்காவுக்கும் நெற்குப்பை பிர்க்காவுக்கும் 6உ வியாழக்கிழமையும், கல்லல் பிர்க்காவுக்கும், கோட்டையூர் பிர்க்காவுக்கும் 8உ சனிக்கிழமையும் தேர்தல் நடைபெறும் என்று தேர்தல் அதிகாரி ஸ்ரீ ரா. ப. ராமசாமி அறிவிக்கிறார்.

குன்னக்குடி பிர்க்கா: மொத்த ஓட்டுக்கள் 2711. ஸ்தானங்கள் மூன்று. போலிங் பூத்துகள், குன்னக்குடி, கிழச்சிவல்பட்டி, சிறுகூடற்பட்டி, ஆத்தங்குடி ஆகிய நான்கு இடங்களில்

நெற்குப்பை பிர்க்கா: மொத்த ஓட்டுக்கள் 2982. ஸ்தானங்கள் மூன்று. போலிங் பூத்துகள், நெற்குப்பை, பிரான்மலை, கிருங்காக்கோட்டை, பூலாங்குறிச்சி, வா புதூர் ஆகிய ஐந்திடங்களில்.

கல்லல் பிர்க்கா: மொத்த ஓட்டுகள் 2943. ஸ்தானங்கள் மூன்று. போலிங் பூத்துகள், கல்லல், கோவிலூர், அ. புதூர், நாச்சியாபுரம் ஆகிய நான்கு இடங்களில்.

கோட்டையூர் பிர்க்கா: மொத்த ஓட்டுகள் 2754. ஸ்தானங்கள் மூன்று. போலிங் பூத்துகள் கோட்டையூர், கொத்தமங்கலம், நேமத்தான்பட்டி, கண்டனூர், புதுவயல் ஆகிய ஐந்திடங்களில்.

தேர்தல் ஒவ்வொருநாளும் காலை 8 மணிமுதல் 12 மணி வரையும் பகல் 1 மணிமுதல் 6 மணி வரையும் நடைபெறும். அந்தந்த பகுதியிலுள்ள நாலணா சந்தா செலுத்தியவர்கள் ஒவ்வொருவரும் மூன்று பேருக்கு ஓட்டு போடலாம்.

### இலங்கையில் இந்திய துவேஷ வெறி

இலங்கையின் அரசியலைச் சீர்திருத்த இலங்கை கவர்னர் செய்துள்ள சிபார்சுகளையும், அவை சம்பந்தமாக அரசாங்க சபையில் ஸ்தல ஸ்தாபன மந்திரி இந்தியர்களையும், செட்டியார் சமூகத்தையும் தாக்கிப் பேசியதையும் பற்றி ஆராய்வதற்காக, தனவைசிய இளைஞர் சங்கத்தின் நிர்வாகக்கூட்டம் மார்ச் 26உ பிற்பகல் தலைவர் திரு எம். ஆர். சேதுராமன் செட்டியார் தலைமையில் நடைபெற்றது. சர்க்கார் ஸ்தாபனங்களில் தினச்சம்பளத்திற்கு வேலை செய்யும் இந்தியர்களனைவரையும் நாடு கடத்தத் திட்டமிட்டிருப்பதைப் பலமாகக் கண்டிப்பதுடன் இதில் தலையிடும்படி இலங்கை கவர்னரையும், இந்திய காங்கிரஸ் மகா சபையையும், இந்திய அரசாங்கத்தையும் கேட்டுக் கொள்வதாகவும், இன்னும் பல தீர்மானங்களும் நிறைவேறின.

மார்ச் 30உ பதுளை சமத்துவ சங்கத்தின் ஆதரவில் பிரம்மாண்டமான பொதுக்கூட்டம் நடைபெற்றது. இலங்கை இந்தியத் தலைவர்களனைவரும் ஒன்றுகூடியிருந்தனர். இந்தியருக்கு இழைக்கப்படும் அநீதிகளை விளக்கி ஸ்ரீமான் கோ. நடேசய்யர் பேசும் போது, வருகிற ஆகஸ்டு மாதம் ஓட்டர்களின் ஜாப்தா தயார்செய்யும்பொழுது இந்தியத் தொழிலாளர்கள் தங்கள் பெயர்களையும் பதிவுசெய்து கொள்ளுமாறு வற்புறுத்த வேண்டுமென்றும், மறுத்தால் வேலை செய்ய முடியாதென்று சத்தியாக்கிரகம் செய்யுங்களென்றும் சொன்னார்.

### தேவகோட்டை
### சரஸ்வதி வாசகசாலை

இவ்வூர் பெருமாள் கோவில் உற்சவத்தில் சரஸ்வதி வாசகசாலையாரால்(7-4-39) வெள்ளிக்கிழமை சப்தாவர்ணத் தன்று சுகாதாரப் பிரசங்கம் நடத்தப்பெறும்.

## கட்டாய ஹிந்துஸ்தானி

### 63 பள்ளிக்கூடங்களில் போதனை

1939-40ம் வருஷத்தில், மொத்தம் 100 பள்ளிக் கூடங்களில் கட்டாய முறையில் ஹிந்துஸ்தானி போதனையை ஏற்படுத்த சென்னை சர்க்கார் தீர்மானித்திருக்கின்றனர். தமிழ் ஜில்லாக்களில் 63 பள்ளிக் கூடங்களில் ஹிந்துஸ்தானி போதிக்கப்படும். ராமநாதபுரம் ஜில்லாவில் அடியிற்கண்ட 4 பள்ளிக்கூடங்களில் அடுத்த வருஷம் ஹிந்துஸ்தானி போதிக்கப்படும்:—

கமுதி போர்டு ஹைஸ்கூல்
பரமக்குடி ஷை
காரைக்குடி ஸ்ரீ மீனாட்சிசுந்தரேஸ்வரர் வித்தியாசாலை
வத்திராயிருப்பு ஹிந்து ஹைஸ்கூல்

### தேசீய வாரம்.

காங்கிரஸ் தலைவர் வேண்டுகோள்

தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவர் ஸ்ரீ ராமசாமி ரெட்டியார் வெளியிட்டிருக்கும் அறிக்கையில் அடியில் வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்:—

காங்கிரஸ் திட்டப்படி ஏப்ரல் 6உ முதல் 13உ வரை தேசியவாரமாகக் கொண்டாட வேண்டும். ஒவ்வொரு நாளும் கூட்டம் கூட்டி சத்தியம், அஹிம்ஸை, தியாகம் முதலியவை குறித்துப் பிரசாரம் செய்ய வேண்டும். தமிழ்நாடு அகில பாரத சர்க்கா சங்கத்தில் சுமார் 4 லட்ச ரூபாய் கதர் கையிருப்பிலிருக்கிறது. அது முழுமையும் தமிழ்நாட்டிலேயே விற்கும்படி செய்ய வேண்டும். அத்தாட்சி பெற்ற சர்க்கா சங்கக் கதரையே வாங்கி உபயோகப் படுத்தும்படி பொதுமக்களைக் கேட்டுக் கொள்கிறேன். காங்கிரஸ் ஊழியர்களும், காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர்களும் தெருத்தெருவாகச் சென்று கதர் விற்பனை செய்ய வேண்டும்.

### புதுவயல்
### ஸ்ரீ சரஸ்வதி வித்தியாசாலைக் கட்டிடத் திறப்பு விழா

இந்நகர் ஸ்ரீ சரஸ்வதி சங்கச்சார்பில் நடைபெற்றுவரும் ஸ்ரீ சரஸ்வதி வித்தியாசாலையின் கட்டிடம் வேலை பூராவும் நிறைவேறிவிட்டது. வருகிற பிரமாதி ஆண்டு சித்திரைத் திங்கள் 11-ம் நாள் திங்கட்கிழமை காலையில் கனம் ராஜா சர் அண்ணாமலை செட்டியார் அவர்கள் திறப்புவிழாவை நடத்தி வைப்பார்.

ஆண்டுவிழா

ஸ்ரீ சரஸ்வதி சங்கத்தின் 17-வது ஆண்டு நிறைவுவிழா அன்றுமாலையில் திருக்குறள் குமரேச வெண்பா ஆசிரியர் உயர்திரு ஜெகவீரபாண்டியக் கவிராயர் அவர்கள் தலைமையில் நடைபெறும். பல அறிஞர்கள் சொற்பெருக்காற்றுவார்களெனக் காரியதரிசி அறிவிக்கிறார்.

### உண்ணுவிரதம் ஒத்திவைக்கப்பட்டது

காரைக்குடி ஸ்ரீ V. வெங்கட்ராமய்யர் அடியில் வருமாறு தெரிவிக்கிறார்:-

காரைக்குடி பஸ் ஸ்டாண்டு லைசன்ஸை ரத்து செய்து ஏப்ரல் முதல் தேதியிலிருந்து முனிஸிபல் நிர்வாகத்துக்குக் கொண்டுவரா விட்டால், உயிர்போகும் வரை உண்ணுவிரதமிருப்பதாய் பத்திரிகைகளில் வெளியிட்டிருந்தேன். ஆனால் மேற்படி தேதியில் முனிஸிபல் கமிஷனரை நேரில் கண்டு பேசியதில் அவர்கள் எடுத்திருக்கும் நடவடிக்கைகள் காரணமாகத் தற்காலம் உண்ணுவிரதத்தை நிறுத்தியிருக்கிறேன்.



### நேமத்தான்பட்டி ரயில்வேஸ்டேஷன்

நேமத்தான்பட்டியில் ரயில்வே ஸ்டேஷன் ஏற்படுத்துவது சம்பந்தமாக, குறிப்பிட்ட இடத்தைப் பார்வையிட ரயில்வே ஏஜெண்டு மிஸ்டர் மூர்ஹெட், சீப் கமர்ஷியல் சூப்ரண்டு, சீப் டிரான்ஸ்போர்ட்டேஷன் சூப்பிரண்டு ஆகியோருடன் மார்ச் 30உ செட்டிநாடு வந்து சேர்ந்தார் நேமத்தான் பட்டி லெவல் கிராஸிங்குக்குச் சென்று அந்த இடத்தைப் பார்வையிட்டார்கள். இந்த இடம் திருமயத்திற்கும் செட்டிநாட்டுக்கும் இடையில் 258-வது மைலில் இருக்கிறது. அவர்களுடன் ரயில்வே பிரயாணிகள் சங்கத் தலைவர் ஸ்ரீ டி. என். காளிதாஸ் அய்யரும் சென்று இடத்தைப் பார்வையிட்டார். பின்னர் ரயில்வே அதிகாரிகள் இரு கட்சியாருடனும் இவ்விஷயத்தைப்பற்றி விவாதித்தார்கள். ராஜா ஸர் அண்ணாமலை செட்டியார், கானாடுகாத்தான் பஞ்சாயத்து போர்டுத் தலைவர் ஸ்ரீ வி. வி. விடி. ரெங்கனாதன் செட்டியார் ஆகியோர் ஒரு சார்பிலும் நேமத்தான்பட்டி காங்கிரஸ் கமிட்டிக் காரியதரிசி ஸ்ரீ சோம. வீரப்பா மதுரை அட்வகேட் ஸ்ரீ கே. ஆர். வெங்கட்டராமய்யர் இவர்கள் நேமத்தான்பட்டியில் ஸ்டேஷன் தேவை யென்றும் விவாதித்தார்கள். செட்டிநாடு ஸ்டேஷன் மக்கள் சஞ்சார மற்ற, போக்கு வரத்து சாதனமில்லாத ஒரு மூலையிலிருக்கிறதென்றும் பிரயாணிகள் ஸ்டேஷனுக்குச் செல்ல இரண்டுமைலுக்கு மேலாக நடக்கவேண்டியிருக்கிறதென்றும் காங்கிரஸ் சார்பாக ஸ்ரீ வெங்கட்ராமய்யர் எடுத்துச் சொன்னார். விவாதங்களை நேச பான்மையுடன் கேட்டுவிட்டு, விவரத்தை ஆலோசனைக் கமிட்டி முன் சமர்ப்பிப்பதாகச் சொல்லி, மிஸ்டர் மூர்ஹெட் தம் சகாக்களுடன் திருச்சி சென்றார்.





## உள் நாட்டுச் செய்திகள்

### காரைக்குடி
### இந்திய இளைஞர் சங்கம்

28—3—39 மாலை 4-30 மணிக்கு சங்க நிலயத்தில் தலைவர் சித. க. கதிரேசன் செட்டியாரவர்கள் தலைமையில் ஸ்பெஷல் மகாசபைக் கூட்டம் கூடி "ஒரே கொள்கையுடைய பல சிறிய சங்கங்கள் இருப்பதைக்காட்டிலும், ஒரு பெரிய ஸ்தாபனமாக இருப்பது நலமென்று கருதுவதாலும், நமது நகருக்கு பிரதம மந்திரி அவர்கள் விஜயம் செய்த காலையில் அதிகமான சங்கங்களிருப்பது அபாயமென்று சொன்னதாலும், ஒத்த கொள்கையுடைய நமது சங்கத்தை இந்நகரில் உள்ள இராமகிருஷ்ண விவேகானந்தர் சங்கத்துடன் இணைத்து விடுகிறது" என்று ஏகமனதாகத் தீர்மானிக்கப்பெற்றது என்று காரியதரிசி அறிவிக்கிறார்.

### தேவகோட்டை கா. கமிட்டி

மார்ச் 19உ மாலை 5 மணிக்கு தோழர் முத்து. வள்ளியப்பா அவர்கள் இல்லத்தில் உபதலைவர் கரு. சொக்கலிங்கம் அவர்கள் தலைமையில் இக்கமிட்டியின் சாதாரணக் கூட்டம் நடைபெற்றது. தலைவர் ஆர். சங்கரன் பிள்ளை அவர்களின் ராஜீநாமா அங்கீகரிக்கப்பட்டு தலைவர் தேர்தல் ஒத்தி வைக்கப்பட்டது பணநெருக்கடியும் பஞ்சக் கொடுமையும் மிகுந்த இக்காலில் ஏழைகளிடமும்கூட நிர்ப்பந்தம் செய்து கமிஷனர் அவர்கள் வரிவசூல் செய்வதை காங்கிரஸ் முனிசிபல் கக்ஷியாருக்கு இக்கமிட்டி எடுத்துக் காட்டுகிறதுடன் கூடுமானவரை பொது ஜனங்களுக்குத் தவணை கொடுத்து கஷ்டப்படுத்தாமல் வரிவசூல் பண்ண ஏற்பாடு செய்யவேணுமாய் முனிசிபல் கா. கக்ஷியாரை இக்கமிட்டி கேட்டுக் கொள்கிறது என்றும் வேறு பல தீர்மானங்களும் நிறைவேறின. 21உ நடைபெற்ற கமிட்டிக் கூட்டத்தில் தோழர் சித. மு. மாரியப்பா அவர்கள் காரியதரிசியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

### லெட்சுமி புரம்
### ஸ்ரீ ராமநவமி விழா

இலட்சுமிபுரம் திரு. ந. சொ. அருஅருணசலம் செட்டியார் அவர்களால் ஸ்தாபிக்கப்பெற்றுள்ள சொக்கலிங்க வித்தியாசாலையில் மார்ச் 29உ காலை 9 மணிக்கு ஷை விழா இனிது ஆரம்பமாயிற்று. தலைமை ஆசிரியர் திரு. K. சுப்ரமண்யம் விழாவின் தத்துவத்தையும் இராமாயணத்தினின்றும் மாணவர் அறியவேண்டிய நீதிகளையும் விளக்கி விழாவை ஆரம்பித்து வைத்தார். உதவி ஆசிரியர் திரு. M. இராமநாதய்யரும் மாணவன் K. சுப்பையாவும் ஸ்ரீ ராமரின் பெருமையை விரித்துரைத்தார்கள்.

### காளையார்கோவில்

மார்ச் 29உ காளையார்கோவில் கிராம காங்கிரஸ் கமிட்டியின் அவசரக் கூட்டம் இரவு 8 மணிக்கு ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸ வாசகசாலைக் கட்டிடத்தில் ஷை கமிட்டித் தலைவர் ஸ்ரீ எஸ். அனந்தராமய்யர் தலைமையில் கூடியது. காளையார் கோவில் சர்க்கிளுக்குப் போட்டியின்றி ஜில்லா போர்டு மெம்பராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஸ்ரீ ஆர். வி. சுவாமிநாதனுக்கு சந்தோஷம் தெரிவித்துக்கொண்டும் ஷையாரவர்கள் இப்பகுதி விஷயங்களை நன்கு கவனிக்கும்படி கோரியும் சென்ற பத்து வருஷ காலமாக இவ்வூரில் அமைக்கப்பட்டுள்ள சப்ரிஜிஸ்திரார் ஆபீஸை எடுத்து விடாமல் இவ்வூரிலேயே இப்பகுதியிலுள்ள ஏழை விவசாய மக்களின் நன்மையைக் கருதி ஸ்திரம் செய்யும்படி கவர்ன்மெண்டாரைக் கோரியும் பல தீர்மானங்கள் நிறைவேறின.

### தேசீய வாலிபர் சங்கம் ஆலம்பட்டி

(ஒரு நிருபர்)

தேசீய வாலிபர் சங்கத்தின் வாரக்கூட்டம் தலைவர் திரு. வடு. சி. பெரியகருப்பன் அம்பலம் தலைமையில் 28-3-39ல் போர்டு ஆண் பாடசாலைக் கட்டிடத்தில் இரவு 8 மணிக்குச் கூடி சென்னை காங்கிரஸ் கவர்ன்மெண்டார் கொண்டு வந்திருக்கும் விற்பனை வரியை இச்சங்கம் மனப்பூர்வமாய் ஆதரிப்பதுடன், ஏழை விவசாய மக்களைக் காப்பதற்கு இவ்வருஷத்தில் இராமநாதபுரம் ஜில்லாவில் மதுவிலக்கை அமுலுக்கு கொண்டுவரும்படி சர்க்காரை வணக்கமாய் கேட்டுக்கொள்ளுகிறது என்ற தீர்மானத்தை நிறைவேற்றியது.

### இராமகிருஷ்ண விவேகாநந்தர் சங்கம்
### காரைக்குடி

29—3—39 புதன்கிழமை மாலை 6-15 மணிக்கு சங்கத்தின் நிர்வாகசபைக் கூட்டம் தலைவர் ஸ்ரீ ராம. சிதம்பரம் தலைமையில் நடைபெற்றது. நமது சங்கத்தில் ஒவ்வொரு ஆங்கில மாதக் கடைசி ஞாயிற்றுக்கிழமைதோறும் தேசியக் கொடி வணக்கம் செய்வதென்றும், ஷை தினம் மாலையிலேயே ஒரு சொற்பொழிவுப் பயிற்சிக் கழகம் ஏற்படுத்தி அங்கத்தினர்கள் கூடிப் பயிற்சி பெற ஏற்பாடு செய்யவேண்டுமென்றும், காரைக்குடி நகரத்திற்கு 'டவுன் ஹால்' இன்றியமையாத தாகையால் நகர சபையார் கவனம் செலுத்தி விரைவில் கட்டி முடிக்க ஏற்பாடு செய்யவேண்டுமென்றும், நமது சங்கத்தின் சார்பாக ஹரிஜனச்சேரிகளுக்குச் சென்று, சுகாதாரப் பிரசாரம் செய்தல், சேரிகளைச் சுத்தம் செய்தல், முதலியன செய்வதென்றும், முனிசிபல் அஜெண்டாக்களை வழக்கம் போல் இனமாகவே அனுப்பவேண்டுமென நகர சபையாரைக் கேட்டுக்கொள்வதென்றும், ஆவிச்சி செட்டியார் சந்தின் மத்தியில் ஒரு மின்சார விளக்குப் போட வேண்டுமென நகர சபையாரைக் கேட்டுக் கொள்வதென்றும், இன்னும் பல தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டு இரவு 8-30 மணிக்குக் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

### முறையூர்

இவ்வூரில் 17—3—39ல் "கிராம அபிவிருத்திச் சங்கம்" என்று ஒரு ஸ்தாபனம் திறுவப்பெற்று, சித. சி. சொக்கனுதன் அம்பலம் தலைவராகவும், சி. கு. பழ. சொக்கனுதப் புலவர் உபதலைவராகவும், சொ. சி. மூக்கய்யா சேர்வை காரியதரிசியாகவும், ராம. ச. செல்லையா பிள்ளை உப காரியதரிசியாகவும், சோ.சா. சோலையப்ப செட்டியார் பொக்கிஷதாரராகவும் நியமிக்கப்பட்டிருக்கின்றனர்.

### திருப்பத்தூரில்
### வருடக் கொண்டாட்டம்

26—3—39 மாலை 6 மணிக்கு கா-ம. போர்டு மிடில் ஸ்கூல் மாணவர் சங்கம் ஷை கலாசாலையின் மைதானத்தில் கூடியது அவ்வமயம் திருப்பத்தூர் ரேஞ்சு டிப்டி இன்ஸ்பெக்டர் ஸ்ரீ தியாகராஜையர் B A L T. அக்ராசனம் வகித்தார். இச்சங்கம் முன் N. M. E. ஸ்கூலில் 13 வூ வேலைநடத்தி பின் மிடில் ஸ்கூலாக மாறிய இக்கலாசாலையில் முதல் வருடத்தைப் பூர்த்தி செய்துள்ளது. செய்யுட்களும் பாடங்களும் தமிழிலும் ஆங்கிலத்திலும் உருக்கமாக ஒப்புவிக்கப்பட்டன. இனிய கீதங்கள் மாணவ மாணவிகளால் பாடப்பட்டன. தமிழிலும் ஆங்கிலத்திலும் சம்பாஷணைகளும் நடத்தப்பட்டன. நமது கலாசாலை என்ற நாடகம் மாணவர்களால் திறம்பட நடிக்கப்பெற்றதைச் சபையோர் கண்டு களித்தார்கள். மாணவிகளால் கோலாட்டமும் கும்மியும் நடத்தப்பட்டன. Extra School influences in Education என்ற ஒரு பிரசங்கத்தை மதுரைக் கல்லூரி ஆசிரியர் ஸ்ரீ C. A. கிருஷ்ணமூர்த்தி ராவ் M. A., F. R. E. S. அவர்கள் பலரும் ஆனந்திக்க உபந்யாசித்தார்கள். மாணவர்களுக்குப் பழைய மானேஜர் ஸ்ரீமான் முத்தண்ண பிள்ளை அவர்களின் குமாரர்களால் பரிசுகள் வழங்கப்பட்டன. பின் ஸ்ரீமான்கள் நல்லசாமி (அட்வகேட்) சென்னை பண்டிட் ராகவாச்சாரியார், வீர. சுப்பையா பிள்ளை முதலியவர்களால் அபிப்பிராயங்கள் கூறப்பட்டன.

### இராயவரத்தில் கம்பர் விழா

மார்ச் 29உ மாலை 5-45 மணிக்கு நேரு கால் பந்தாட்ட மைதானத்தில் பாரதி வாலிபர் சங்க ஆதரவில் கம்பர் விழா நடைபெற்றது. அவ்வமயம் திரு. அழ. காளலிங்கம் பிள்ளையவர்கள் தலைமையில் கூட்டம் ஆரம்பமாகியது. தமிழ்ப் புலவ சிகாமணியாகிய கம்பரைப்பற்றி திருவாளர்களான அரு. ரெங்கநாதன், வீர. சாத்தப்பன், அள. வள்ளியப்பன், ரா. பாலசுப்பிரமணியம் (ஆசிரியர் திருவள்ளுவர் கல்விக்கழகம்) ஆகியோர் மிக்க அழகாகப் பேசினர்.

### ராமச்சந்திரபுரம்
### பழய மாணவர் சங்கம்

ஸ்ரீ பூமீஸ்வர ஹைஸ்கூல் பழய மாணவர் சங்க வருடக் கூட்டம் ஏப்ரல் 7உ வெள்ளிக்கிழமை ஸ்கூல் அசெம்பிளி ஹாலில் நடைபெறும். திருச்சி நேஷனல் காலேஜ் புரொபஸர் ஸ்ரீ எம். எஸ். சீனிவாச சர்மா தலைமைவகித்து 'இந்தியாவுக்குத் தேவையான கல்வி' என்பதைப் பற்றி பிரசங்கிப்பார். புதுக்கோட்டை மகாராஜா கல்லூரி தமிழ் பண்டிதர் ஸ்ரீ பி. மீனாட்சிசுந்தரம் நாயுடு எம். ஏ., 'மணிவாசகம்' என்பதுபற்றித் தமிழில் பேசுவார். பழய மாணவர்களால் ஓர் சங்கீதக் கச்சேரியும் நடத்தப்பெறும்.

## தேவகோட்டை நகரசபை மீட்டிங்

(நமது நிருபர்)

இந்நகர சபையின் சாதாரணக் கூட்டம் ஆபீஸ் கட்டிடத்தில் 30-3-39 மாலை 3 மணிக்கு சேர்மென் ஸ்ரீ முத்து. கரு. அரு. பழ. அருணாசலம் செட்டியார் தலைமையில் நடைபெற்றது. அவ்வமயம் 17 வது வார்டு சுப்பிரமணியபுரத்தில் திருப்பத்தூர் ரோட்டிலிருந்து சிலம்பணி ஊருணிக்குப் போகும் வீதியை அகலப்படுத்தி சாலை போடுவதென்றும், இராம நகரில் கலக்டர் ஆபீசுக்கு எதிரே கிழமேல் போகும் ரோட்டின் இரு பக்கங்களிலும் மரங்கள் வைத்து உண்டு பண்ணுவதென்றும், எழுவங்கோட்டை ரோட்டில் பெரி. சோம. சோமசுந்தரம் செட்டியார் வீட்டுக்கு வட பக்கம் இரண்டு மட்டன் ஸ்டால்கள் கட்டுவதென்றும், தேவகோட்டை சால்வதி டாக்கிசுக்கு இதுவரை ஏற்படுத்தப்பட்டிருந்த தமாஷ் வரி ரூ. 200ஐ ரூ. 150 ஆகக் குறைத்து விடுவதென்றும், முனிசிபல் எலிமெண்டரி பாடசாலைகளில் ஒரு அணா கிரையம் உள்ள தமிழ் போஸ்டல் பாக்கெட் கைடைப் பாடப் புஸ்தகமாகக் வைப்பதென்றும், லைசென்சு இன்ஸ்பெக்டருக்கு ஒரு பியூன் கொடுப்பதென்றும் இன்னும் இதர விஷயங்களும் தீர்மானிக்கப்பட்டுக் கூட்டம் இரவு சுமார் 8 மணிக்கு முடிந்தது.

---

கிழக்கு ரஷ்யாவில் பனிக்கட்டிமீது யாத்திரை செய்யும் படகுகளைக் கட்டி உபயோகித்து வருகிறார்கள். இவை பனியின்மீது சறுகி ஓடுகின்றன.

## நகர சபைகளின் நிர்வாக அறிக்கை

### 1937--38

சென்னை மாகாணத்திலுள்ள நகரசபைகளின் 1937–38ம் வருஷத்திய நிர்வாக அறிக்கையின் பிரதியொன்று நமக்குக் கிடைத்திருக்கிறது. அதில்கண்ட முக்கியமான விவரங்கள் சிலவற்றைக் கீழே சுருக்கி வெளியிடுகிறோம்:—

பிரஸ்தாப வருத்தில் புதிதாக இரண்டு முனிசிபாலிடிகள் அமைக்கப்பட்டன—தேவகோட்டையும் குடிவாடாவும். நகர சபைகளின் மொத்த எண்ணிக்கை 82. இவற்றின் அங்கத்தினர் தொகை 1647.

**கல்வி**

ஆரம்பக் கல்வி உள்பட, சாதாரண, மூலதனச் செலவு இனங்களில் 1937-38ல் எல்லா நகர சபைகளும் ரூ 36,44,000 செலவிட்டிருக்கின்றன. 27 நகர சபைகள் கட்டாய ஆரம்பக் கல்வியை அமுலுக்குக் கொண்டு வந்தன. 50 நகர சபைகள் கல்வி வரி விதித்தன. பள்ளிக்கூடம் செல்லும் வயதுடைய ஆண்களில் 22 சதமானமும், பெண்களில் 47½ சதமானமும், பிரஸ்தாப வருஷத்தில் பள்ளிக்கூடஞ் செல்லவில்லை. தென்னுவியில் 61 சதமானம் பையன்களுக்குப், காரைக்குடி, ஆதோனி, குடிவாடா முனிசிபாலிடிகளில் 50 சதமானத்துக்கு அதிகப்பட்ட பையன்களுக்கும், இதர 24 நகர சபைகளில் 30 சதமானத்துக்கு அதிகப்பட்ட பையன்களுக்கும், ஆரம்பக் கல்விக்கு வசதி செய்யப்படவில்லை. பெண்களுக்கு ஆரம்பக் கல்வி அளிக்கும் விஷயத்தில், வாணியம்பாடி, காரைக்குடி, தேவகோட்டை ஆகிய மூன்று நகர சபைகளுமே மிக பிற்போக்கான நிலையிலிருக்கின்றன. 9 முனிசிபாலிடிகளில், பள்ளிக்கூடம் செல்லும் வயதுடைய பெண்களில் 70 சதமானத்துக்கு மேற்பட்டவர்களுக்குக் கல்வி அளிக்கப்படவில்லை. காரைக்குடியில் பள்ளிக்கூடஞ் செல்லும் வயதுடைய பையன்களில் 54 சத விகித பையன்களும், பெண்களில் 94 சத விகிதப் பெண்களும் பள்ளிக்கூடஞ் செல்லவில்லை, தேவகோட்டையில் இவ் விகிதங்கள் முறையே 40 ஆகவும், 85 ஆகவும் இருந்தன.

**மாணவர் தொகை**

முனிசிபல் எலிமெண்டரி பாடசாலைகளின் தொகை ஆண்களுக்கு 898; பெண்களுக்கு 377. மொத்தம் 1,275. முந்தின வருஷம் இத்தொகை 1,284. இவற்றில் படித்த பையன்கள் தொகை 96,377; பெண்கள் 63,483. ஆரம்பக் கல்விக்காக ஏற்பட்ட செலவு ரூ 21,42,000, இந்தப் பள்ளிக்கூடங்களில் 163 முஸ்லீம்களுக்கும், 93 தாழ்த்தப்பட்ட, பிற்போக்கான வகுப்பினருக்கும் தனியாக ஏற்பட்டவை.

**தொழிற் கல்வி**

சில முனிசிபல் பள்ளிக்கூடங்களில் நெசவு, நூற்றல், பைண்டிங், தச்சு வேலை, தையல் வேலை, தேனீ வளர்த்தல், குடும்ப சாஸ்திரம், விவசாயம், கூடை முடைதல், மர வேலை முதலியவற்றைக் கற்பிக்கிறார்கள்.

**புத்தகசாலை**

புத்தகசாலைகள் வைக்கவும், பொருளுதவி செய்யவும் இவ்வருஷம் முனிசிபாலிடிகள் ரூ 31,271 செலவிட்டிருக்கின்றன.

**சுகாதாரம்**

இவ்வருடம் வைத்தியம், சுகாதாரம், பிறப்பு இறப்பு, தண்ணீர் சப்ளை ஆகிய இனங்களில் நகரசபைகள் செலவிட்ட தொகை ரூ 74,75,000. மொத்தம் 120 வைத்திய ஸ்தாபனங்கள் நகரசபைகளால் பரிபாலிக்கப்பட்டு வந்தன. எல்லா முனிசிபாலிடிகளிலும் சேர்ந்து பிறப்பு விகிதம் ஜனத்தொகையில் சராசரி ஆயிரத்துக்கு 40·6 ஆகிறது. இந்த விகிதம் திருப்பூரில் 62·5 ஆகவும், தேவகோட்டையில் (மிகக் குறைந்தது) 28 ஆகவும் இருந்தது. மரணவிகிதம் ஆயிரத்துக்கு 27 ஆக இருந்தது.

**கொள்ளை நோய்**

சென்ற மூன்று வருஷங்களில் கொள்ளை நோய்களில் மாண்டவர் தொகை வருமாறு:—

| | காலரா | வைசூரி | பிளேக் |
|---|---|---|---|
| 1935-36 | 2,077 | 1,147 | 219 |
| 1936-37 | 1,780 | 310 | 20 |
| 1937-38 | 898 | 197 | 160 |

எல்லா நகரங்களிலும் சேர்ந்து 566,411 வீடுகள். இவற்றில் 257,665 ல்தான் தனிக் கக்கூஸ்களிருந்தன.

**வரி**

சொத்துவரி, தொழில்வரி, ஊழியர்வரி தமாஷ்வரி, இதர இனங்களில் எல்லாம் சேர்த்து மொத்தம் ரூ 50,49,000 வரியாக வசூலாயிருக்கிறது. வசூலிக்க ஏற்பட்ட செலவு ரூ 1,85,000.

## ஸ்ரீ உதயசங்கரின் கலா நிலையம்

உதயசங்கரின் கலா நிலையத்திற்கு 94 ஏக்கர் விஸ்தீரணமுள்ள நிலத்தை பம்பாய் சர்க்கார் இலவசமாகக் கொடுத்திருக்கின்றனர். உதயசங்கர், ஸ்ரீமதி ஸிமிக்கி, ஸோரா விராலி ஆகியோர் ஆசிரியர்களாக இருப்பர். பல மாகாணங்களிலிருந்தும் பொறுக்கியெடுக்கப்பட்ட 6 சங்கீத நிபுணர்களும் 4 நாட்டியக்காரர்களும் ஆசிரியர்களாகச் சேர்த்துக்கொள்ளப்படுவார்கள். மிஸ்டர் ஜார்ஜ் பிர்ஸி என்றுருஷ்யர் பண விஷயங்களைக் கவனித்துக் கொள்வார்.







## நோட்டீஸ்.

இதனால் சகலமானவர்களுக்கும் தெரிவிப்பது யாதெனில் புதுக்கோட்டை சமஸ்தானம் வலையபட்டி கிராமத்திலிருக்கும் நாட்டுக்கோட்டைச் செட்டியார் மு. வ. ராம. வள்ளியப்ப செட்டியார் தமது இந்துப் பொதுக் குடும்பத்தினின்றும் தமக்குரியவைகளைப் பெற்றுக்கொண்டு நாளது வெகுதான்ய வருஷம் மாசி மாதம் 21உ 4-3-39ல் விடுதலைப் பத்திரமும் எழுதி ரெஜிஸ்தர் செய்து தந்திருக்கிறார். ஷெ யார் செய்கைகளோ லேவாதேவியோ மற்றெவையோ ஷெ மு. வ ராம. இந்துப் பொதுக்குடும்பத்தையேனும் அதன் சொத்துரிமைகளையேனும் எவ்விதத்திலும் பாதிக்காதென்பதை இதன் மூலம் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இப்படிக்கு

மு. வ ராம. ராமனுதன் செட்டியார்,

மு. வ. ராம. குடும்பமானேஜர்,

23—3—39 இரங்கூன்.

---

### ருஷ்யா—இந்தியா ரயில் பாதை

ஆப்கன் அரசர் ஸாகிர் ஷா, தமது நாட்டை ரயில் மூலம் இந்தியாவுடனும் ருஷ்யாவுடனும் இணைக்க தீர்மானித்துள்ளார். இந்த ரயில்பாதை மூன்று தேசங்களினுடையவும் ஆதிக்கத்திலிருக்கும். இதனுல் கொழும்பு—லண்டன் பிரயாணத்தை ஒரு வாரத்தில் முடிக்க முடியுமாம்.

---

### ஐந்து வர்ணங்களில் அலரும் அந்திமந்தாரை

கொழும்பு லெயார்ட்ஸ் பிராட்வே (புது வழி) 224ல் உள்ள கொழும்பு அன்பு மார்க்க சங்கத்து ஔடதத் தோட்டத்தில் "அந்திமந்தாரை" என்ற புட்பச் செடி ஒன்றிருக்கிறது. அதில் ஐந்து வர்ணங்களில் ஐந்துவிதப் பூக்கள் பூக்கின்றன. இதில் விசேஷம் என்னவென்றால் இந்த செடியில்நின்றும் உண்டாகும் வித்திலிருந்தும் இம்மாதிரியே ஐந்துவித புட்பங்களைத் தரும் செடிகள் உற்பத்தியாகின்றன. வழக்கமாகவே அந்திமந்தாரை ஒரேவகைப் புட்பத்தைத்தான் கொடுக்கும். ஆனல் இந்தச் செடி ஐந்துவித பூக்களைத் தருவது பார்ப்போருக்கு மிகுந்த ஆச்சரியத்தை அளிக்கிறது. இச்செடி ஒட்டுவைத்தோ, வித்துக்களைச் சேர்த்துப்போட்டோ உண்டாக்குவதல்ல. தனித்தனி வித்திலிருந்தே ஐந்துவிதப் பூக்கள் உண்டாகின்றன. மற்றும் நாளேற ஏற புதுப் புது வர்ணங்களும் அதில் காணப்படுகிறது. வைஷ்ணவ மதத்தவர் அணியும் குறிபோல தெளிவாகப் படர்ந்த பல பூக்களும் இப்போது அதில் உண்டாகின்றன. இச்செடியின் உபயோகம் சாதாரண அந்திமந்தாரையைவிட அதிகச் சக்தி கொண்டதாகவும், வியாதிகளைக் குணப்படுத்துவதில் தீவிரமாக வேலை செய்வதாகவும் டாக்டர்கள் அபிப்பிராயப் படுகிறார்கள்.



## வெளிநாட்டுச் செய்திகள்

### கொளும்பு அன்புமார்க்க சங்கம்

கொளும்பு அன்புமார்க்க சங்கத்தின் அழைப்பிற் கிணங்க வரும் ஏப்பிரல் மாதம் 3ம் வார இறுதியில், அன்பு மார்க்க சங்கத்தாபிதரும், "ஞானக் களஞ்சியம், ஞானயோக ரகசியம், வேதாந்த பாஸ்கரன், அன்பே கடவுள்" முதலான அநேக ஞானயோக நூல்களின் கர்த்தாவும், "ஞான சூரியன்" பத்திரிகாசிரியருமான மெய்ஞ்ஞான சொரூபர் மாட்சிமை தங்கிய மஹான் ஸ்ரீகுரு ஞானபூபதிகள் அவர்கள் இலங்கைக்கு விஜயம் செய்கிறார்கள். பூபதி அவர்கள் சுமார் 15 தினம் இலங்கையில் சுற்றுப்பிரயாணம் செய்து ஆங்காங்கு பல பெருங் கூட்டங்களில் ஞானயோக சம்பந்தமாக சொற்பொழிவு நிகழ்த்த ஏற்பாடு செய்யப்படுகிறது. அன்பர்கள் ஆங்காங்கு பிரசங்கத்திற்கு ஏற்பாடு செய்வதாயிருந்தால் அவர்களும், ஏனைய சங்கங்களும் 15—4—39க்குள், காரியதரிசி, அன்பு மார்க்க சங்கம், 224, லெயார்ட்ஸ் பிராட்வே, கொளும்பு என்ற விலாசத்திற்கு எழுதிக்கொள்ளும்படி வேண்டப்படுகிறார்கள்.

### சங்கத்தைப்பற்றிய கருத்து

கொழும்பு "தனவைசிய இளைஞர் சங்கத்தை"க் குறித்துப் பேராசிரியர் திரு. ந. மு. வெங்கடசாமி நாட்டார் அறிஞர் கருத்துரைப் புத்தகத்தில் பின் வருமாறு எழுதுகிறார்:—கொழும்பு நகரிலுள்ள "தனவைசிய இளைஞர் சங்க"த்தில் தலைவரான திரு. சேதுராமன் செட்டியாரும் அமைச்சர் முதலானவர்களும், தமிழில் அளவு கடந்த ஆர்வமும் ஊக்கமும் உடையவர்களாக இருக்கின்றனர். திருப்பணிச் செல்வர்களாகிய தனவைசியர்கள் நமது தமிழைப் போற்றும் கடப்பாட்டினை யுணர்ந்து, அதனை விருப்புடன் பேணி வருவது மிகவும் பாராட்டுதற்குரியதாகும். தமிழ் மொழியானது தனவைசியர்களாலேயே உயர்நிலை யெய்தல் வேண்டும். இச்சங்கமானது தமிழ் வளர்ச்சிக்கு மேன்மேலும் உழைத்துச் சிறப்புறுமாறு தமிழ்த் தெய்வத்தின் திருவருளைச் சிந்திக்கிறேன்"

### பினங்கு செட்டியார்கள் வர்த்தக சங்கம்

நிர்வாக சபைக் கூட்டம் பங்குனி மீ 7உ 20-3-39 திங்கட்கிழமை மாலை 4-30 மணிக்கு சங்கக் கட்டிடத்தில் தலைவர் திரு. வெ. ராம. அழகப்ப செட்டியாரவர்கள் தலைமையில் நடைபெற்றது. 14 அங்கத்தினர்கள் விஜயம் செய்திருந்தனர் மாசி மாத சங்க வரவு செலவு கணக்குகள் வாசித்துக் காண்பிக்கப்பட்டு, ஒப்புக்கொள்ளப்பெற்றன. நிர்வாக சபையில் ஏற்பட்ட காலி ஸ்தானங்கட்கு அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். ஐந்தாவது ஆண்டு சங்க அறிக்கையைத் தயாரிக்க ஒரு சப் கமிட்டி நியமிக்கப்பெற்றது. சங்க நிலயத்தில் ரேடியோ செட் ஒன்று வாங்கி வைக்கவேண்டுமென்று திரு. தெ. ராம. வெ. சித. வெங்கிடாசலம் செட்டியாரவர்கள் கொண்டுவந்த தீர்மானம் ஏகமனதாய் நிறைவேறி கூட்டம் மாலை 6-30 மணிக்கு இனிது நிறைவெய்தியது.





## நோட்டீஸ்

### சிவகெங்கை டி. மு. கோர்ட்டு.

S. C. No 676 of 38.

ராம. முரு. சோமசுந்தரம் செட்டியார் } வாதி

மகிபாலன்பட்டி குமா. சுப. சுப்பிரமணியன் செட்டியார் (1)
ஷெயார் மகன் குமரப்ப செட்டியார் (2) } பிரதிவாதிகள்.

2-ம் பிரதிவாதிக்கு தெரிவிப்பதென்னவென்றால்,

வாதிக்கு தாங்கள் இருவரும் ரூ 200க்கு யுவஞ்ச அர்ப்பிசிமீ 15உ எழுதிக் கொடுத்திருந்த பிராமிஸரி நோட்டு துகையை வரப்பற்ற உங்கள் பேரில் ஷெ நிபரில் பிராது செய்து 2-ம் பிரதிவாதிக்கு சப்ஸ்யூடெட் சர்விஸ் சமனுக்கு உத்திரவாகி 28-4-39உ வாயிதா ஏற்பட்டிருப்பதில் அன்று பகல் 10 மணிக்கு ஷெ கோர்ட்டில் ஆஜராகி உமக்குள்ள எதிர்வாதத்தை தெரிவித்துக்கொள்ளத் தவறினுல் எக்ஸ்பார்ட்டியாக தீர்மானிக்கப்படுமென்பதை இதன் மூலம் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

R. பக்தவத்ஸல அய்யங்கார்,
அட்வகேட்.

Sivaganga, 1—4—39.

---

### ஈப்போ செட்டியார்களின் வர்த்தக சங்கம்

ஐக்கிய மலாய்நாடு நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் வர்த்தக பேராக் கிளைச் சங்க எட்டாவது ஆண்டு நிறைவு விழா 12—3—39 ஞாயிற்றுக் கிழமையன்று, சங்கக் கட்டிடத்தில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. மாலை 5 மணிக்குத் தலைவர், திரு. உ. ராம. மெ. சுப. சேவு. இராமநாதன் செட்டியாரவர்கள், வந்திருந்த அங்கத்தினர் அனைவரையும் வரவேற்று, மகிழ்ச்சியுரையாகச் சில வார்த்தைகள் கூறிய பின்னர், காரியதரிசி திரு. குமா. நா. நா. சா. இராமசாமி செட்டியாரவர்கள், 1938ம் வருடத்தியக் கணக்குகள் முதலியவற்றை வாசித்தார்கள். அவைகளெல்லாம் முறையே ஒப்புக்கொள்ளப்பெற்ற பின்னர், புதுவருட உத்தியோகஸ்தர்களும், நிர்வாகசபை அங்கத்தினர்களும் தேர்ந்தெடுக்கப் பெற்றனர். திரு. மெ. செ. நாராயணன் செட்டியாரவர்கள் தலைவராகவும் திரு. அரு. மு. பழ. முத்துக் கருப்பஞ் செட்டியாரவர்கள் காரியதரிசியாகவும் திரு. செ. பி. ச. ஸ்ரீனிவாசன் செட்டியாரவர்கள் உபகாரியதரிசியாகவும், திரு. வி. ச. பழனியப்ப செட்டியாரவர்கள் பொக்கிஷதாராகவும், ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப் பட்டனர். பின்னர் நிர்வாக சபையாரும் தேர்ந் தெடுக்கப்பட்டனர். கம்பார், திரு உ. ராம. மெ. சுப. சேவு. இராமநாதஞ் செட்டியாரவர்கள், கோலாலம்பூர், தலைமைச் சங்கத்துக்கு உபதலைவராக ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார். சென்ற வருடத் தலைவர் திரு. உ. ராம. மெ. சுப. சேவு. இராமநாதன் செட்டியாரவர்களும் புதுவருடத் தலைவர் திரு. மெ செ. நாராயணன் செட்டியாரவர்களும் சிறிது பேச காரியதரிசி அவர்களால் நன்றி கூறப்பட்டு இரவு 7 மணிக்குக் கூட்டம் முடிந்தது.

## செய்தித் திரட்டு

**புதிய வரிகள்**

பெட்ரோல் வரி ஏப்ரல் முதல் தேதியிலிருந்து இம்மாகாணத்தில் அமுலுக்கு வந்துவிட்டது. காலனுக்கு ஒன்றரைஅணு வரி வசூலிக்கப்படுகிறது. மார்ச் 31உ கூடிய சென்னை அசெம்பிளியில் தமாஷ் வரி நிறைவேறிச் சட்டமாயிற்று. நான்கணுவிற்குக் குறைந்த கட்டணங்களுக்கு வரி விதிப்பதை ரத்துசெய்ய வேண்டுமென்று கொண்டுவந்த திருத்தம் தோல்வியுற்றது.

●

**புகையிலை வரி**

மார்ச் 31உ அஸம்பிளியில் பிரதம மந்திரி புகையிலை வரி மசோதாவைப் பிரேரேபித்தார். சிலர் எதிர்த்தனர். முடிவில் மசோதா பொறுக்குக் கமிட்டியின் பரிசிலனைக்கு விடப்பட்டது. ஏப்ரல் 17ந் தேதிக்குள் இக்கமிட்டி தனது அறிக்கையைச் சமர்ப்பிக்கும்.

●

**விற்பனை வரி**

பின் விற்பனை வரி மசோதாவைப் பிரேரேபித்தார். சாமான்கள் விற்பனை மீது வரிவிதிக்க இம்மசோதா கொண்டுவரப்படுகிறது. வருஷம் ரூ. 10,000 க்குமேல் நடைபெறும் வியாபாரத்துக்கு வரி விதிக்கப்படும். 10,000 முதல் 20,000 வரை வரி ரூபா 75; 20,000 முதல் 40,000 வரை வரி ரூபா 150. அதற்கு மேல் அரை சதவிகித வரி விதிக்கப்படும். இதன்படி ரூபாய்க்கு ஒரு தம்பிடி வரியாகின்றது. மசோதாவிற்கு நன்கிரண்டு திருத்தங்கள் வந்தன. முடிவில் மசோதா பொறுக்குக் கமிட்டியின் பரிசிலனைக்கு அனுப்பப்பட்டது.

●

**இலங்கை இந்தியர்**

ஆயிரக் கணக்கான இந்தியர்களை இலங்கையிலிருந்து வெளியேற்றுவதற்கு இலங்கைப் போக்கு வரத்து மந்திரி புரட்சிகரமான ஒரு திட்டத்தைத் தயாரித்து மந்திரி சபையில் சமர்ப்பித்திருக்கிறார். இதற்கு முதற்படியாக, சர்க்கார் இலாகாக்களில் தினச் சம்பளத்திற்கு வேலை செய்யும் அந்நியர்களெல்லோரையும் நிர்த்தாட்சண்யமாக நீக்கி அவர்களது இடத்தில் சிங்களவர்களை நியமிக்கவேண்டுமென்றும், நீக்கப்பட்ட இந்தியர்களை சர்க்கார் செலவில் இந்தியாவுக்குத் திருப்பி அனுப்பிவிட வேண்டுமென்றும், மறுபடியும் இலங்கைக்கு வராதபடி தடுக்கவேண்டுமென்றும் அவர் தமது திட்டத்தில் குறிப்பிட்டிருக்கிறார். இந்தத் திட்டத்தை எதிர்த்து இலங்கை முழுவதும் இந்தியர்கள் கண்டனக் கூட்டங்கள் கூட்டி வருகின்றனர்.

●

**அசம்பிளியில் கேள்வி**

இலங்கை சர்க்கார் உத்தேசித்துள்ள இந்தியர் வெளியேற்றத் திட்டத்தைப் பற்றிச் சென்னை அஸம்பிளியில் கேட்கப்பட்ட கேள்விக்கு, சுமார் 10,000 இந்தியத் தொழிலாளர்களை வேலையிலிருந்து நீக்கிவிட உத்தேசிப்பதாயும், இது சம்பந்தமாக மத்திய சர்க்காருடன் கடிதப் போக்கு வரத்து நடத்தி வருவதாயும் தொழில் மந்திரி பதிலளித்தார்.

●

**ஸ்ரீமதி கமலா தேவி**

ஸ்ரீமதி கமலாதேவி சட்டோபாத்தியாய ஜூன் 2உ பம்பாயிலிருந்து புறப்பட்டு ஐரோப்பா செல்கின்றார். ஜூன் மாதம் கோபன்ஹேகனில் நடக்கவிருக்கும் சர்வதேச ஸ்திரீகள் மகாநாட்டுக்கு விஜயஞ் செய்வார். பாரிஸ், ஜினிவா முதலிய இடங்களுக்கும் விஜயஞ் செய்வார். செப்டம்பரில் அமெரிக்கா செல்வார்.

●

**வியாபார ஒப்பந்தம்**

இந்தோ—பிரிட்டிஷ் வியாபார ஒப்பந்தத்தை இந்தியா சட்டசபை நிராகரித்துவிட்டது. லீக் கட்சியினர் நடுநிலைமை வகித்தனர். இந்த உடன்படிக்கை லங்காஷயருக்கு முன்னிலும் அதிகமான சலுகையை அளிக்கிறதென்று, அதை எதிர்ப்போர் விளக்கிக் காட்டினர். ஆனால் ராஜாங்க சபையில் நிறைவேறியிருக்கிறது.

●

**நடவடிக்கைகள் தமிழில்**

சகல விதமான கடிதப்போக்கு வரத்தும் (சர்க்காருக்கு எழுதுவது நீங்கலாக), போர்டுக் கூட்ட நிகழ்ச்சி விவரங்களும், தமிழிலேயே எழுதப்பட வேண்டுமென்றும், போர்டார் வாங்கும் துணிகளைத்தும் கதராகவே யிருக்கவேண்டுமென்றும் சுத்த சுதேசிச் சாமான்களையே வாங்க வேண்டுமென்றும் மதுரை ஜில்லா போர்டு தீர்மானித்திருக்கிறது.

●

**கிராம வைத்திய வசதி**

கிராமங்களில் சுகாதார வசதியை அபிவிருத்தி செய்வதுபற்றி சென்னை சர்க்கார் ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கின்றனர். திருச்சி, தஞ்சை, ராமனுதபுரம் முதலிய 8 ஜில்லாக்களில் சுகாதாரக் கூட்டுறவு சங்கங்கள் அமைக்கப்படும். இச்சங்கத்தில் சேரும் அங்கத்தினர்கள் வருஷச் சந்தா ஒன்றரை ரூபாய், ரொக்கமாகவோ பண்டமாகவோ கொடுக்கவேண்டும். மருந்துகள் வாங்கிய விலைக்கும், சிகிச்சை வசதி இனமாகவும் அளிக்கப்படும். ராமனுதபுரம் ஜில்லாவில் வில்லுப்பனூரில் சங்கத்தின் தலைமை ஸ்தாபனமிருக்கும். இதன் அதிகாரத்தில் வில்லுப்பனூர், பட்டக்குளம், சல்லிப்பட்டி ஆகிய கிராமங்கள் இருக்கும்.

●

**தி. நா. பாங்கு டைரக்டர்கள் அப்பீல்**

திருவாங்கூர் நாஷனல் அன் கொல்லம் பாங்கு டைரக்டர்களைக் கைது செய்ய திருவாங்கூர் சர்க்கார் வாரண்டு பிறப்பித்திருந்தது பற்றிய அப்பீல் வழக்கு மார்ச் 30உ பிரிவி கவுன்ஸில் முன் விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது. விசாரணை மறுநாளும் நடைபெற்று முடிவில் பிரிவி கவுன்ஸில் அப்பீலை நிராகரித்துவிட்டது. ஏப்ரல் 4உ மேற்படி டைரக்டர்கள் சென்னை மாகாண பிரதம மாஜிஸ்திரேட் முன்பு ஆஜர் செய்யப்பட்டனர். அவர்களை அன்றிரவு திருவனந்தபுரத்துக்குப் புறப்படும் ரயிலில் திருவனந்தபுரம் கொண்டு போய், திருவனந்தபுரம் ஜில்லா போலீஸ் சூப்பிரண்டு வசம் ஒப்புவிக்கும்படி மாஜிஸ்திரேட் உத்தரவிட்டார். அதன் மேல் அவர்கள் போலீஸ் கமிஷனர் ஆபீஸுக்கு அழைத்துச் செல்லப்பட்டனர்.

**பத்திரிகைப் பார்ஸல்கள்**

ஒரு பத்திரிகையின் ஒரே வெளியீட்டில் ஒன்றுக்கு மேற்பட்ட பிரதிகளடங்கிய பார்ஸலுக்கு ஏப்ரல் 1உ முதல் அடியிற்கண்ட தபால் கட்டணம் விதிக்கப்பட்டிருப்பதாக இந்தியா கவர்ன்மெண்டு அறிக்கை கூறுகிறது: முதல் 10 தோலாவுக்கும் அதற்கு உட்பட்டதற்கும் ½ அணு; அதற்கு மேல் ஒவ்வொரு ஐந்து தோலாவுக்கும் காலணு. பத்திரிகைப் பிரதிகளைத் தனித்தனியாக அனுப்பினுல் வரக்கூடிய சார்ஜ் மேற்கண்ட மொத்த சார்ஜை விடக் குறைவாக இருக்குமானுல், குறைந்த கட்டணமே வசூலிக்கப்படும்.

●

**பம்பாய் மேயர்**

ஸ்ரீமான் பி. என். காஞ்சிபா (காங்கிரஸ்) பம்பாய் மேயராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்.

●

**அ. இ. கா. கமிட்டி**

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி ஏப்ரல் 28உ கூடுமெனத் தெரிகிறது.

---

### கௌரவ மாஜிஸ்டிரேட்டு கோர்ட்

(ஒரு நிருபர்)

திருப்பத்தூர் கௌரவ மாஜிஸ்டிரேட்டுக் கோர்ட்டுக்கு தலைவராக பிரபல டாக்டரும் தேசபக்தருமான ஸ்ரீ வி. ஏ. பீட்டர் L. C. P. & S. (BOM) அவர்கள் சர்க்காரால் நியமிக்கப்பட்டிருக்கிறார்.



### நோட்டீஸ்.

தேவகோட்டை
டி. மு. கோர்ட்டு

1938௵ O. P. No. 2
1939௵ I. A. No. 265

தேவகோட்டை K. M. RM. பழனியப்ப செட்டியார்— } மனுதார்

ஷை மனுதாரின் அட்வகேட் இதனுல் தெரிவிப்பதென்னவென்றால்:-

ஷை மனுதாரின் சகோதரி ஆனந்தவல்லி ஆச்சிக்கு வரவேண்டிய டிபாசிட்டுத் தொகைகளை வசூலிக்க மனுதார் தனக்கு வார்சு extended சர்டிபிகேட்டு கொடுக்கவேணுமாய் ஷை கோர்ட்டில் மனுப்போட்டு 13-4-39உ நோட்டீசு வாய்தா ஏற்பட்டிருப்பதால் ஆக்ஷேபணை யுள்ளவர்கள் ஷை தேதியில் கோர்ட்டு முன் ஆஜராகி தெரிவித்துக்கொள்ள வேண்டியது.

C. Srinivasa Iyengar,
Advocate.

தேவகோட்டை
4—4—39.







## சினிமாச் செய்திகள்

**சாந்தா ஆப்தே**

பிரபாத் கம்பெனியில் டாம்லேயும் பத்தலாலும், தயாரிக்கப் போகும் சாந்த தியானேஷ்வரில் சாந்தா ஆப்தே நடிப்பார் என்று தெரிகிறது அவர் பிரபாத் கம்பெனியிலிருந்து விலகப் போவதாக வெளிவந்த வதந்திக்கு ஆதாரமில்லை.

★

**கிரேட்டா கார்போ**

உலகப்புகழ்பெற்ற நடி இவர். முதன் முதல் இவர் ஒரு விளம்பரத் துண்டுப் படத்தில் தான் நடித்தாராம். டைரக்டர் மாரிஸ் ஸ்டில்லர் அதைப் பார்த்து, தமது படத்தில் நடிக்க அமர்த்திக் கொண்டார்.

★

**சினிமா ராணி**

நியூ யார்க் டெய்லி நியூஸ் என்ற பத்திரிகை, ஒரு சினிமாத் தேர்தலை நடத்தியது. அந்தத் தேர்தலில் ஜீனட் மாக்டனல்ட் 1939-ம் வருஷத்து சினிமா ராணியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்.

★

**ஸ்திரீகள் மட்டும்**

மூன்று மாகாணங்களைச் சேர்ந்த மூன்று பெண்கள் பம்பாய் வந்து சேர்கிறார்கள். சதீஷ் என்ற எஞ்சினீயர் இடையில் வந்து சேர்கிறார். மூவரில் இருவர் இவரை நேசிக்கின்றனர். நேசம் காதலாகக் கனிகிறது. இருவரில் யார் சதீஷை மணக்கிறது என்ற கேள்வி எழுகின்றது. விஷயத்தை முடிவுசெய்யும் பொறுப்பை ஸதீஷிடமே விடுகின்றனர். ஆனுல், ஸதீஷுக்குக் காதலில்லை. இவர்களுடைய பயனற்ற ஆராய்ச்சியினடுவே, ஸதீஷின் மனைவி புகுந்து ஆத்திரங்கொள்கிறாள். மூன்று பெண்களும் அவளால் அவமதிக்கப்படுகின்றனர். இந்த ஆண்களே இப்படித்தான் என்று வெறுப்புக்கொண்டுமுடிவில் பெண்கள் ஆசிரமம் ஒன்றைத் தனியாக நிறுவுகின்றனர். இதுதான் 'ஸ்திரீகள் மட்டும்' என்ற படத்தின் கதைச் சுருக்கம். ஸாகர் மூவிடோன் தயாரித்துள்ள படம். ஸபிதா தேவி, பிப்பூ, பிரபா, ஸுரேந்திரா முதலியோர் நடிக்கும் ஹிந்திப் படம்.

★

**மாடர்ன் தியேட்டர்ஸ்.**

சேலம் மாடர்ன் தியேட்டர்ஸார் திருவிளையாடல் புராணத்தி லுள்ள ஒரு கதையைப் படமாகத் தயாரிக்க ஏற்பாடு செய்துவருகிறார்களாம். அவர்களுடைய "ஆனந்தாச்சிரமம்" ஏப்ரல் கடைசியில் வெளிவரும். மாணிக்க வாசகர் படத்திற்கு ஒத்திகைகள் மும்மரமாக நடத்திவருகிறார்கள்.

★

**அஜ்மீரில் புதுக் கம்பெனி.**

ஹிந்துஸ்தான் மூவிடோன் லிமிடெட் என்ற பெயருடன், அஜ்மீரில் ஒரு படக் கம்பெனி இணைக்கப்பட்டிருக்கிறது. இக்கம்பெனி, அமெரிக்காவும், இங்கிலாந்தும் நீங்கலாக ஏனைய வெளிநாடுகளிலிருந்து, மாதம் குறைந்தது ஒரு படமாவது இறக்குமதி செய்யுமாம். முக்கியமாக, பிரான்ஸ், ஜர்மனி, ருஷியா இத்தேசங்களிலிருந்தே படங்கள் தருவிக்கப்படுமாம். வெளிநாடுகளுக்கு, முக்கியமாக ஐரோப்பாவுக்கும் அமெரிக்காவுக்கும் அனுப்பத்தக்க முறையில் குறுகிய படங்களையும் தயாரிக்குமாம்.



**ஆலி பாபா**

பிரசித்திபெற்ற அராபியக் கதைகளிலொன்றைக்கொண்டு ஆதாரமாகசாகர் கம்பெனியார் ஹிந்தியிலும், பஞ்சாபியிலும் படந் தயாரிக்கப் போகிறார்கள். ஸர்தார் அக்தார், குலாம், மகமத் சுரேந்திரா ஆகியோர் முக்கிய பாத்திரங்கள்.

★

**சார்லி சாப்ளின்**

இவருடைய பிறந்த தினம் ஏப்ரல் 16உ வருகிறது. இத்தினத்தை வெகு சிறப்பாகக் கொண்டாட பிரிட்டனில் ஏற்பாடு செய்கிறார்கள். சார்லி நடித்த பழய படங்களில் பலவற்றை டெலிவிஷன் மூலம் ஒளிபரப்பப் போகிறார்கள்.

★

**சினிமாத் தொழிலுக்குப் பாதுகாப்பு**

மற்ற தேசங்களில், கவர்ன்மெண்டார் சினிமாத் தொழிலுக்கு வேண்டிய சலுகைகளும், பாதுகாப்பும் அளித்துவருகின்றனர். ஆனுல் இந்தியாவில் அவ்வாறு செய்யப்படாதது மிகுந்த துரதிர்ஷ்டம் என்று கல்கத்தா பிரைமரி பிலிம் கம்பெனியின் மானேஜிங் டயரக்டரான ஸ்ரீ. எம். என். கோஷ் எம். ஏ. எழுதியிருக்கிறார். அமெரிக்காவிலுள்ள பாங்குகள் வருஷத்திற்கு 2 முதல் 3 சத விதம் வரையுள்ள குறைந்த வட்டிக்கு சினிமாத் தொழிலுக்கு 35 கோடி ரூபாய் வரை பணம் கடனுக உதவியிருக்கின்றன. ஆனுல் இந்தியாவிலும் எந்த பாங்கும் அவ்வாறு செய்திருப்பதாகத் தெரியவில்லை.

★

**பக்த புண்டரீகன்**

வேல் பிக்சர்ஸில் தயாராகி வருகிறது எம். ஆர். கிருஷ்ணமூர்த்தி, பி. எஸ். சிவபாக்கியம் முதலியோர் நடிக்கின்றனர்

Edited, Printed and Published by S. MURUGAPPA for Dhana Vysian Company Ltd., at the Kumaran Power Press, Karaikudi. (S. INDIA).

